4 பக்கங்கள் 15 காசுகள்

பதிவு எண்: எம். 8798

## காங்கிரஸ் தோல்வி தொடருகிறது

பவநகர், ஜன. 3—

பவநகர் நகரசபைத் தேர்தலில் காங்கிரஸ் படு தோல்வியடைந்தது. முன்பு ,மொத்தமுள்ள 40இடங்களில் காங்கிரஸ் 25 இடங்களை வைத்திருந்தது. இப்போது அதன் பலம் 13 ஆகக் குறைந்து விட்டது.

# தீக்கதிர்

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) நாளிதழ்

கதிர் 12 மதுரை 8 1—74 செவ்வாய் மலர் 7

## காங்கிரஸ் ஆட்சியில் சிறுபான்மை மொழியினர் நிலை

புதுடெல்லி, ஜன. 5—

1961-ம் வருட முதலமைச்சர் மாநாட்டில் எடுக்கப்பட்ட முடிவுகளின்படி மாநிலங்களில் சிறுபான்மை மொழியினருக்கு கல்வி வசதிகளும், மற்ற பாதுகாப்புகளும் அளிப்பதில் மாநில அரசுகள் தவறி விட்டன. இந்தத் தகவலை சிறுபான்மை மொழியினர் பற்றிய கமிஷனருக்கு அறிவித்துள்ளனர். அவருக்கு பல மாநில அரசுகள் தகவல் அறிவிக்கக் கூடத் தவறியுள்ளன.

### கோவை,பாண்டிச்சேரி தேர்தல்:

# யதார்த்த நிலையை வலது கம்யூனிஸ்ட் அ.தி.மு.க. தலைவர்கள் ஏற்க மறுப்பதேன்

## ஏ. பாலசுப்ரமண்யம் கேள்வி

மதுரை, ஜன. 4—

கோவைத் தொகுதியிலும், பாண்டித் தொகுதியிலும் யதார்த்த நிலைமையை ஒப்புக் கொண்டு காங்கிரசைத் தோற்கடிக்க வேண்டுமென்று அதிமுக வையும் வலது கம்யூனிஸ்ட் கட்சியையும் மார்க்சிஸ்ட் கட்சியின் தமிழ் மாநிலச் செயலாளர் தோழர் ஏ. பாலசுப்ரமணியம் கேட்டுக் கொண்டார்.

தி மு க வைப் பொறுத்தவரை அந்தக் கட்சி இனிமேல் தலைதூக்க முடியும் என்ற பேச்சுக்கே இடமில்லை என்றும் அவர் தெளிவு படுத்தினர்.

இங்கு இன்று திலகர் திடலில் நடைபெற்ற பொதுக் கூட்டத்தில் பேசுகையில் பாலசுப்ரமண்யம் மேலும் குறிப்பிட்டதாவது:—

தமிழகத்தில் நடைபெறப்போகும்உப தேர்தலில் காங்கிரசைத் தோற்கடிக்க வேண்டிய பொறுப்பு ஜனநாயகக் கட்சிகளுக்கு ஏற்பட்டிருக்கிறது. இதற்கு திண்டுக்கல் தேர்தலில் ஏற்பட்டது போன்ற ஒற்றுமையை உருவாக்க வேண்டும்.

அத்தகைய ஒற்றுமை உருவானல் காங்கிரஸ் இரண்டும் சேர்ந்து வந்தாலும் நாம் தோற்கடிக்க முடியும். தி மு க இனி தலைதூக்க முடியாது. உதயசூரியனை அவர்கள் காட்டிக் கொண்டிருக்கலாம். ஓட்டுக் கிடைக்கபோவதில்லை.

### தமிழகத்தின் தேவை

சிண்டிகேட் - இண்டிகேட் எதிலும் சேராமல் நாம் ஆரம்பத்திலிருந்தே இடது சாரி ஜனநாயக கட்சிகளின் ஒற்றுமைக்கு அரும்பாடு படுகிறோம். நமக்கு அற்பப் புத்தி இல்லை.

இந்த ஜனநாயக கூட்டணியில் வலது கம்யூனிஸ்ட்கட்சியும்சேரவேண்டும்என்றுதான் நாம் ஆசைப்படுகிறோம். ஆனல் கல்யாணசுந்தரம் விட்டுக் கொண்டிருக்கும் அறிக்கையில் அத்தகைய உணர்வு பிரதிபலிக்கிறதா? அவருடைய பாணியில் நாம் பேச விரும்பவில்லை.

திண்டுக்கல் தேர்தலில் ஏற்பட்டது போன்ற ஒற்றுமை ஏற்படுத்துவதுஇன்று தமிழகத்தின் தேவையாகியுள்ளது. இத்தகைய ஒற்றுமை உருவாவதைக் குலைக்க வேண்டாம் என்று கேட்டுக் கொள்கிறேன்.



### யாருக்கு பலம்?

கோவைத் தொகுதியிலும், பாண்டித் தொகுதியிலும் உள்ள நிலைமை என்ன?

கோவையில் நாம் தான் பலம். இதை நிரூபிப்பதற்கு இரண்டு கட்சிகளும் தனியாக நின்று பார்க்க வேண்டுமா?

கோவைத் தொகுதியை பாலதண்டாயுதம் வெற்றிபெற்ற தொகுதி என்று பேசுகிறார்கள். பாலதண்டாயுதத்துக்கு முன் 1967-ல் எங்கள் கட்சியைச்சேர்ந்த ரமணி அந்த தொகுதியில் வெற்றி பெற்றுர். பாலதண்டாயுதம வாங்கிய ஓட்டுக்களை விட ரமணி அதிக ஓட்டுகள் வாங்கினர். அவர் ஒன்ருயிருந்த காங்கிரசை எதிர்த்து காங்கிரசின் வேட்பாளரான பகாசுர முதலாளி மகாலிங்கத்தை எதிர்த்து, மகாலிங்கத்தின் சகல தில்லுமுல்லுகளையும் எதிர்த்து வெற்றி பெற்றுர். அப்போது ரமணி வாங்கிய ஓட்டுகள் 2லட்சத்து 40 ஆயிரம்.

1971-ம் ஆண்டில் பாலதண்டாயுதம் பிளவுபட்ட காங்கிரசைத்தான் எதிர்த்தார். 7 கட்சிகளின் ஆதரவு இருந்தது. பெரியாரின் ஆதரவு இருந்தது. இந்திரா அலை அடித்தது. அப்படியும் அவர்வாங்கிய ஓட்டுக்கள் குறைவே. 2லட்சத்து 14 ஆயிரம் ஓட்டுகள் தான் வாங்கினர். இந்த வித்தியாசம் எதைக் காட்டுகிறது?

கோவையிலும், சிங்கா நல்லூரிலும் திருப்பூரிலும் இந்த தொகுதியிலும் மற்ற இடங்களிலும் மார்க்சிஸ்ட் கட்சியின் பலம் தெளிவானது. இந்த யதார்த்தத்தை ஒப்புக் கொண்டால் உடன்பாடு சாத்தியம்.

### வலது கம்யூ.வின் வீம்பு

பாண்டித் தொகுதியில் தற்போது எங்களைவிட வலது கம்யூனிஸ்ட் கட்சி பலமானது என்று ஒப்புக்கொள்கிறோம். அந்தத் தொகுதியை விட்டு விட்டு கோவையை அவர்கள் கேட்பதேன்! இது வீம்புதானே?

பாண்டியில் வலது கம்யூனிஸ்ட் அமைச்சராக சுப்பையா பதவிவகித்தார். 3 எம் எல் ஏ க்களை பெற்றிருந்தீர்கள். பாண்டியில் அ.செம்பிளிதொகுதிகளில்18ல் போட்டியிடப போவதாக வலது கம்யூனிஸ்ட் கட்சி செயற்குழு உறுப்பினர் கே டி ராஜு அறிவித்தது எதைக் காட்டுகிறது?

தனியாக மந்திரிசபை அமைக்கும் அளவுக்கு தங்களுககு பலம் இருக்கிறது என்று அறிவிப்பதாகத்தானே இதிலிருந்து பொருள்கொள்ள முடியும்? அந்த நிலையிலிருந்து கொண்டு அ தி மு கவுடன் சீட்டுகளுக்காகப் பேரம் செய்கிருர்கள். அத்தகைய பலம் பொருந்திய இடம் வேண்டாமாம். நாடாளுமன்ற சீட்டுக்கு கோவைதான் வேண்டுமென்று வலது கம்யூனிஸ்ட் கட்சி கேட்பதேன்?

பாண்டியில் இந்திரா காங்கிரசின் வேட்பாளராக கல்யாணிகுமாரமங்கலம் நின்ருல் அவரை எதிர்க்க நீங்கள் விரும்பவில்லை. இந்திரா காங்கிரசை பாண்டியில் எதிர்க்க உங்களுக்கு விருப்பமில்லையா? இண்டியும் - சிண்டியும் ஒன்ருன பின்னும் ஏனிந்த நிலை?

நேர்மைக்கும், உண்மைக்கும் மதிப்பு கொடுத்தால் இன்னும் உடன்பாடு ஏற்படுவது சாத்தியமே. நாங்கள் வலது கம்யூனிஸ்ட் கட்சியை சேர்த்துக் கொள்ளவே விரும்புகிறோம். அவர்கள் பின்பற்றும் நிலை இன்னமும் காங்கிரசுக்கு உதவும் நிலையாகவே இருக்கிறது.

வலது கம்யூனிஸ்ட் கட்சியின் வீம்புக்கு அதிமுக இடம் கொடுக்கக்கூடாது என்று கேட்டுக் கொள்கிறேன்.

### "நிலப்பிரபுத்துவக் கொத்தடிமையை எதிர்த்து முதலில் களம்புகுந்தது செங்கொடி விவசாயிகள் சங்கமே"

## விவசாயிகள் சங்க கொடியேற்று விழாவில் தனுஷ்கோடி முழக்கம்

பழநி. ஜன. 6—

இங்கு 4ந்தேதி துவங்கிய தமிழ்நாடுவிவசாயிகள்சங்க 17 வது மாநாட்டின் முதல் நிகழ்ச்சியாக தோழர் பி. எஸ். தனுஷ்கோடிவிவசாயிகள் சங்க கொடியை ஏற்றி வைத்தார். அப்போது அவர் பேசியதாவது.

கடந்த 30 ஆண்டுகளுக்கு முன்னதாக தமிழகத்தில், குறிப்பாக தஞ்சையில் நிலப்பிரபுத்துவ அடிமைகளாக விவசாயிகளும், விவசாயத் தொழிலாளர்களும கட்டுண்டுகிடந்தார்கள்.எந்தஒரு அரசியல் கட்சியும் இவர்களை மீட்க முன்வரவில்லை



1943-ம் ஆண்டு முதன் முதலாக தமிழக கம்யூனிஸ்ட் இயக்கத்தின் சார்பாக அமரர் சீனிவாசராவ் தஞ்சை நிலப் பிரபுக்களை எதிர்த்து, அவர்களின் கோட்டையை எதிர்த்து விவசாயிகளுக்காகவும், விவசாயத் தொழிலாளிகளுக்காகவும்-குறிப்பாக அரிஜன மக்களுக்காகவும் குரல் கொடுத்தார்.

அப்படி அந்த ஆண்டில் கொடித்தடிமை முறையை

(3-ம் பக்கம் பார்க்க)

### மதுரையில் நெசவாளர்கள் மேலும் கைது

மதுரை, ஜன. 4—

கை நெசவாளர்கள் மறியல் போராட்டத்தில் 4-வது நாளான இன்று மேலு 14பேர் கைது செய்யப்பட்டனர்.

முதலாளிகள வீட்டு முன் மறியலில் ஈடுபட்டு இது வரை மொததம 46 பேர் கைதாகியுள்ளனர்.

### முத்துராமலிங்க தேவர் சிலை திறப்பு

மதுரை, ஜன. 5—

போராட்டவீரா நேத்தாஜி சுபாஸ்சந்திர போசின் நெருங்கிய சகாவான பசும்பொன முத்துராமலிங்கத தேவரின் சிலையை இங்கு இன்று ஜனதிபதி கிரிதிறந்து வைத்தார்.

இந்த சிலை திறப்பு விழாவில் பல்லாயிரக்கணக்கான மக்கள் திரண்டிருந்தனர். சுதந்திரப் போராட்டததில் முத்துராமலிங்கத் தேவரின் பங்கைப் பற்றி ஜனதி கிரி புகழ்ந்து பேசினர் பதி

## கல்யாணசுந்தரத்தின் "ஊன" அரசியல்

முதலாளிகளின் கூஜாவான காங்கிரஸ், தி.மு.க. வுடன் ராமமூர்த்தி ரகசிய உறவு வைத்துக்கொண்டிருக்கிருர். ஏற்கனவே கால் ஊனமாகி இருக்கும் அவர் நீண்டநாள் வாழவேண்டும் என ஆசைப்படுபவன் நான். ஆகவே அவர் முறையான அரசியலை பேசவேண்டும்.

தான் ஒரு உண்மையான கம்யூனிஸ்ட் என்று அவர் சொல்லிக்கொள்வாரானல், இந்த இடைத் தேர்தலில் அ. தி. மு. க., வலது கம்யூனிஸ்ட் கூட்டணிக்கு ஆதரவு தரவேண்டும்,

— கல்யாணசுந்தரம் கோவையில் ஜன, 3-ல் பேசியது. அலைஓசை 4—1—73.

முதலாளிகளின் கூஜாவான காங்கிரஸ் என்று கல்யாணசுந்தரம் வருணித்திடும் அதே காங்கிரசுடன் உத்திரப்பிரதேசத்தில், தேர்தல் உறவு, தொகுதி உடன்பாடு.

ஒரிசாவில் தேர்தல் உடன்பாடு.

மணிப்பூரில் தேர்தல் உடன்பாடு.

கேரளத்தில் கூட்டாட்சி.

வெட்கம், மானம் என்ற உணர்ச்சிகள் கடுகளவேனும் கல்யாணசுந்தரத்துக்கு இருக்குமானல் தன்னுடைய தேர்தல் கூட்டாளியை "கூஜா" என அழைத்திருக்க மாட்டார்.

அப்படி கூறியிருப்பது இவருடைய சொந்தக் கருத்தாக இருக்குமானல். தமிழ்நாட்டின் சூழ்நிலைக்கேற்ப வெளியிட்டு இருக்கும் சொந்தக் கொள்கையாக இருக்குமானல் முதலாளிகளின கூஜாவான காங்கிரஸ் கட்சியின்கூஜாதானே நீங்கள்?

காங்கிரஸுக்கு ஒருபுறத்தில் கூஜா தூக்கிக் கொண்டு மறுபுறத்தில் அதனைஎதிர்க்கும் நாடகம் தமிழ்நாட்டு மக்களுக்கு தெரியாமலா போகப்போகிறது?

களத்திலே சந்திப்போம் தயாராகுங்கள்.

ராமமூர்த்திக்கு கால் ஊனம்தான். எல்லோருக்கும தெரிந்த விஷயம்தான்.

இவ்வளவு லேட்டாகத்தான் கல்யாணசுந்தரம் கண்டுபிடித்திருக்கிருர். ஆனல் கல்யாணசுந்தரத்துக்கு உச்சியிலிருந்து உள்ளங்கால்வரை ஊனம் —அரசியல் ஊனம்.

காங்கிரசுக்குகூஜா தூக்கிஅரசியல்பிழைப்புநடத்தும் கல்யாணசுந்தரம் காங்கிரஸ் எதிர்ப்பாளரைப் போல் நடிப்பது அவரதுநாற்றமெடுக்கும் அரசியல் ஊனத்துக்கு ஒரு அடையாளம்.

### இன்றைய நெருக்கடிக்குக் காரணம்

# உற்பத்தி பெருகாததா? ஜனப் பெருக்கமா?

## பொறுப்பற்ற முறையில் பேசும் இந்திராவுக்கு தோழர் அரிகிருஷ்ணக் கோனர் கேள்வி

மதுரை, ஜன, 4—



நம் நாடு சுதந்திரம் வாங்கி 25 ஆண்டுகள் ஆகியும் மக்கள் துயரம் தணியவில்லை பெருகிக் கொண்டிருக்கிறது இந்த நிலையில் உற்பத்தி பெருகினல்தான் நெருக்கடி தீரும் என்கிருர் பிரதமர் இந்திரா. இவ்வாறு பேசும் இந்திராவைப் பார்க்கிலும் உலகில் வேறு எந்தப்பிரதமரும் இருக்க முடியுமா என்று அகில இந்திய விவசாயிகள் சங்க பொதுச்செயலாளர் தோழர் அரிகிருஷ்ண கோனர் கேள்வி கேட்டார். மதுரை திலகர் திடலில் மாபெரும் பொதுக் கூட்டத்தில் அவர் பேசினர். அவரது பேச்சு வருமாறு:-

புதிய ஆண்டான 1974-ல் தமிழ் நாட்டு மக்கள் காங்கிரஸ் ஆட்சியையும், தி.மு.க. ஆட்சியையும், எதிர்த்து கடுமையாக விரிவான அளவில் போராட வேண்டியதிருக்கிறது.

ஏனெனில் 1973-ம்ஆண்டு முழுவதும்விலைவாசிஉயர்வு, வேலையில்லாத் திண்டாட்டம் மக்களை எவ்வளவு தாக்க வேண்டுமோ அவ்வளவுக்கு தாக்கியது. அந்நிலை இவ்வாண்டும் மாறவில்லை. புதிய ஆண்டிலும் தொடர்கிறது.

### புத்தாண்டுப் பரிசு

ஆனல் இந்திராகாந்தியும், அவரது கட்சியினரும அரசாங்கங்களுக்கு எதிராக புதிய ஆண்டில போராடவேண்டாம் என புத்தாண்டு செய்தியாக கூறியுள்ளார்.

ஆனல் காங்கிரஸ்ஆட்சியினல் ஏற்பட்ட விலைவாசி உயர்வை எதிர்த்து பம்பாய் மக்களும், மகாராஷ்டிர மக்களும் இந்திராகாந்திக்கு ஜனவரி 2-ல் மகாராஷ்டிர பந்த்தை புத்தாண்டுப் பரிசாக வழங்கியுள்ளனர்.

அப் பந்த் அன்று அமைதியாக போராடிய மக்கள் மீது துப்பாக்கிச்சூடுநடத்தி 6 பேரை பலி கொண்டு தனது சுயரூபத்தைக்காட்டியுள்ளது.

### சிவசேனவும், காங்கிரசும்

ஆனல் இதே காங்கிரசாட்சி சில நாட்களுக்கு முன்பு சிவசேனைக் கட்சியினர் கர்நாடக மக்களுக்கெதிராக மகாராஷ்டிர பந்த் நடத்தியபோது, அக் கட்சியோடு ஒத்துழைத்து பந்த்துக்கு ஆதரவளித்தது.

அதே காங்கிரசாட்சியின் விலைவாசி உயர்வை எதிர்த்து ஜனவரி 2-ல் நடைபெற்ற மகாராஷ்டிர பந்த்தின்போது 6 பேரை சுட்டுக்கொன்றனர்.

பஞ்சாப், தமிழ்நாடு, அஸ்சாம் மாநிலங்களைத் தவிர ஏனைய மாநிலங்களில் தானியங்களின் விலை எக்கச்சக்கமாக உயர்ந்துள்ளது. கேரளம், கர்நாடகம் ஆகிய மாநிலங்களிலெல்லாம் அரிசி கிலோ ரூ.5-க்குவிற்கப்படுகின்றன. இதேபோல் வாழ்க்கைக்குத் தேவையான அனைத்துப் பொருட்களிலும் விலை உயர்வு ஏற்பட்டுள்ளது.

ஏன் இந்நிலை எனக் கேட்டால் உற்பத்தியைபெருக்க வேண்டும் என்றும் ஜனத்தொகை பெருகிவிட்டது என்றும் கூறுகிருர்கள்.

ஆனல் உண்மைஎன்ன? சுதந்திரம் அடைந்தபோது, உணவு உற்பத்தி 5 லட்சம் டன்...

(4-ம் பக்கம் பார்க்க)

# தீக்கதிர்

## வாரத்தில் மூன்று நாள் வேலை

இன்று முதலாளித்துவ உலகத்தைப் பீடித்துள்ள பெரும் வியாதி விலைவாசி உயர்வு வேலையில்லாத் திண்டாட்டம்.

மக்களைச் சுரண்டும் பல்வேறு வழி முறைகளில் விலைவாசி உயர்வும் ஒன்று. முதலாளி வர்க்கமும் அதன் அரசாங்கமும் சேர்ந்து நின்று தம் நாட்டு மக்கள் மீது நடத்தும் தாக்குதல் இது.

இதனால் அமெரிக்கா, பிரிட்டன், ஜப்பான் போன்ற முதலாளித்துவ நாடுகளில் இன்று பெரும் நெருக்கடி ஏற்பட்டுள்ளது.

பிரிட்டனில் ஏற்பட்டுள்ள நெருக்கடி சகல பகுதி மக்களையும் பாதித்துள்ளது. ஸ்தாபன ரீதியாக அமைந்த பிரிட்டிஷ் தொழிலாளி வர்க்கம் தன் மீது சுமத்தப்படும் நெருக்கடியின் சுமையைத் தாங்கிக் கொள்ளத் தயாராக இல்லை. எதிர்த்துப் போராடுகிறது.

இந்தப் போராட்டம் திட்டமிட்ட முறையில் கட்டுக்கோப்புடனும் பரவலாகவும் நடக்கிறது.

பிரிட்டனிலேயே மிகவும் பலமான தொழிலாளர் ஸ்தாபனம் பிரிட்டிஷ் நிலக்கரித் தொழிலாளர் சங்கம். ஏற்கனவே செய்து கொண்ட சம்பள ஒப்பந்த விகிதங்கள் இன்று செல்லுபடியாகா, அவைகளை மாற்றும் வரை ஓவர் டைம் வேலை செய்ய மாட்டோம் என அறிவித்தனர்.

அதே போல், மின் தொழிலாளர்களும், என்ஜினியர்களும் பறைசாற்றினர். இதனால் நிலக்கரி, மின்சார உற்பத்தி பயங்கரமாகப் பாதித்தது. பெரும் பெரும் தொழில்களை எல்லாம் மூட வேண்டிய நிலை ஏற்பட்டது.

இந்த நிலையில, பிரிட்டிஷ் ஏகபோக முதலாளிகளும் ...மந்திரி சபையும் செய்ததென்ன?

உழைக்கும் மக்களின் கோரிக்கைகளை ஏற்றதா? இல்லை.

உற்பத்தி குறைந்து, தொழில்கள் மூடப்பட்டு, மக்கள் பாதிக்கப்பட்டாலும் பரவாயில்லை, தொழிலாளர்களின் கோரிக்கைகளை ஏற்கக் கூடாது என்ற முடிவு செய்துள்ளது.

நிலக்கரித் தட்டுப் பாட்டையும் மின்சார உற்பத்திக் குறைவையும சமாளிக்க பிரிட்டிஷ் அரசாங்கம் தேசமுழுவதுமே நெருக்கடிப் பிரகடனம் செய்தது. எல்லாத் தொழில்களும், அலுவலகங்களும் வாரத்தில் மூன்று நாட்கள்தான் வேலை செய்ய வேண்டும் என்று உத்தரவிட்டது-

விளைவு?

7 லட்சத்து 50 ஆயிரம் தொழிலாளருக்கு "லே ஆப்" இன்னும் ஒரு வாரத்தில் இந்த எண்ணிக்கை ஒரு கோடியே 50 லட்சமாக உயரப் போகிறது என்று பிரிட்டிஷ் பொருளாதார நிபுணர்கள் அறிவிக்கிறார்கள்.

உழைத்து சம்பளம் பெற்று வாழ்க்கை நடத்தும் மொத்தம இரண்டு கோடியே 70 லட்சம பிரிட்டிஷ் தொழிலாளர்கள், ஊழியர்களில் பாதிக்கு மேற்பட்டோருக்கு "லே ஆப்" கொடுக்கப்படுகிறது.

இத்துடன்பிரிட்டனில் 7 லட்சத்து 30ஆயிரம்பேர் வேலையில்லாமல் அரசாங்க மான்யத்தில் வாழுபவர்களையும் சேர்த்துக் கொள்ளுங்கள். கன்சர்வேட்டிவ் பிரிட்டிஷ் ஆட்சியில் மக்களின் நிலை என்ன என்பது ஓரளவு தெளிவாகும்.

முதலாளி வர்க்கம் நாட்டு நலனைவிட, மக்களது நலனை விட தன்னுடைய சொந்த நலனையே பெரிதாகக் கருதுகிறது என்பதற்கு இன்றைய பிரிட்டிஷ் நெருக்கடி ஒரு உதாரணம்.

இதே வழியைத்தானே நமது வாய்ச்சவடால் சோஷலிஸ்ட் இந்திரா காந்தி ஆட்சியும் பின் பற்றுகிறது?

## ஆட்டுக்குட்டி மீது பரிவு

கருணாநிதி அறிவித்து விட்டார், புதிய வரிகள் வரும் என்று.

இந்திராவின் அடிச்சுவட்டைத்தான் தன்னுடைய அரசும பினபற்றும் என்று கூறிட கருணாநிதிக்கு வெட்கம். ஆகவே தேனில் மருந்தைக் கலந்து கொடுக்கிறார்.

ஏழை மக்களைப் பாதிக்காத வண்ணம், நடுத்தர வர்க்கத்தினரை வருத்தாமல் தன்னுடைய அரசு புதியவரிகளை விதிக்கப்போகிறதாம்.

ஏழை, நடுத்தர வர்க்கத்தினரின்பால் கருணாநிதிக்கு எவ்வளவு அக்கறை என்பதை சென்ற ஆறுண்டுகாலமாக தமிழகம் பார்த்துவிட்டது; அனுபவித்துவிட்டது. இன்று போராடிக்கொண்டிருக்கும் சிம்சன் தொழிலாளர்களையும், குமரி போக்குவரத்து தொழிலாளர்களையும், போராட்டத்தில் குதிக்கப் போகும் பஞ்சாலைத் தொழிலாளர்களையும் கேட்டால், கருணாநிதி அரசு ஏழையின் பால் கொண்டுள்ள அக்கறை என்ன என்பது தெரியும்.

7½ சதவிகிதம் டீசல் விலை உயர்ந்த உடனேயே, அதைப்போல் பன்மடங்கு பஸ் போக்குவரத்தில் கட்டண உயர்வுக்கு உத்தரவிட்ட கருணாநிதி ஏழை நடுத்தர மக்களின்பால் எத்தகைய அக்கறை கொண்டுள்ளார் என்பது யாவருக்கும் தெரியும்.

ஏழையின் பால் கருணாநிதி வடிக்கும் கண்ணீர் முதலைக்கண்ணீர்; ஓநாய் ஆட்டுக்குட்டி மீது கொள்ளும் பரிவு.

இந்திரா காந்தியின் அதே முதலாளித்துவப் பாதையில், மக்களை வதைக்கும் வரிகளைத்தான் கருணாநிதியும் போடப் போகிறார் என்பதை இன்னும் ஒரு சில வாரங்களில் பார்க்கலாம்.

---

### மகாராஷ்ட்ர பந்த் வெற்றி

# காங்கிரஸ் அடக்குமுறைக்கு ஏழு பேர் பலி- மூன்று பேர் காயம்

பம்பாய், ஜன. 4—

**மகாராஷ்ட்டிர இடதுசாரிக்கட்சிகள் நடத்திய "பந்த்" வெற்றிகரமாக நடந்தது. இதனை அடக்க, இ. காங்கிரஸ் ஆளும் மகாராஷ்டிா மாநில அரசு, துப்பாக்கிசூடு நடத்தியது. அதில் ஏழு பேர் கொல்லப்பட்டனர் மூவருக்குக் காயம் ஏற்பட்டது.**

விலைவாசி உயர்வை எதிர்த்தும் - உணவுப் பண்டங்களின்விநியோகம்ஆகிய வற்றிற்காகவும்மகாராஷ்ட்ர மாநிலத்தில் இடதுசாரி எதிர்க்கட்சிகள் மாநிலம் தழுவிய "பந்த்" மிக வெற்றிகரமாக நடத்தின,

அந்தசமயத்தில், யோட்மல் அருகில் உள்ள வாணி என்ற ஊரில் போலீசார் துப்பாக்கிச் சூடு நடத்தினர். இதன் காரணமாக, ஏழு பேர் உயிரிழந்தனர். மேலும் மூவருக்குக் காயம் ஏற்பட்டது.

இர்காம் என்ற ஊரிலும் போலீஸ் துப்பாக்கிச்சூடு நடத்தியிருக்கிறார்கள். புனாவில், மேயர் தலைமையில் மறியல் நடந்தது. பம்பாய்க்கும் புனாவுக்கும் செல்லும் ரயில்பாதையில் அமர்ந்து கொண்டு, மேயர் சாந்தாராம் திவாகர் ஆர்ப்பாட்டம் நடத்தினர்.

இதனால், ரயில் போக்குவரத்து ஸ்தம்பித்துவிட்டது.

40,000 துறைமுகத்தொழிலாளர்கள்இந்தப் 'பந்த்'தில் கலந்து கொண்டனர். இதனால் சரக்கு ஏற்றுமதி- இறக்குமதி ஸ்தம்பித்துவிட்டது.

இந்த "பந்த்"தில் காங்கிரஸ்கட்சியும், ஐ. என். டி. ...சியும் கலந்து கொள்ளவில்லை. சிவசேனையும்கலந்து கொள்ளவில்லை. ஆனால். காங்கிரஸ் காரர்கள் தலைமையில் உள்ள பலதொழிற் சங்கங்கள் தலைமையைமீறி கலந்து கொண்டன.

பத்திரிகைத் தொழிலாளர்களும் இதில் கலந்து கொண்டார்கள். இதனால் பம்பாயிலிருந்து பத்திரிகை எதுவும் வரவில்லை. பள்ளிக்கூடங்கள், கல்லூரிகள், கடைகள், பாங்குகள் எதுவும் திறக்கப்பட வில்லை.

லட்சக்கணக்கான தொழிலாளர்கள் வேலைக்குச்செல்லாததால் எல்லாத் தொழிற்சாலைகளும், அனைத்து ஸ்தாபனங்களும் மூடியிருந்தன.

---

# பஸ் டிரைவரை கன்னத்தில் அடித்தாராம் கர்நாடக அமைச்சரின் அக்கிரமம்

பெங்களூர், ஜன. 4—

கர்நாடகவிவசாய அமைச்சர் சிக்கேகோவ்டே என்பவர், அக்கிரமமான முறையில் பஸ் டிரைவர் ஒருவரை கன்னத்தில் அடித்து விட்டாராம். அதனால் பெங்களூரில் 2½ மணிநேரம் சிடிபஸ்களோ, சர்விஸ் பஸ்களோ ஓடவில்லை.

பெங்களூருக்கு 40 கிலோ மீட்டர் தூரத்தில் உள்ள தோட்டா பேலலாபூர் என்ற ஊருக்கருகில் நெருக்கடியான ரோட்டில் சர்விஸ் பஸ் ஒன்று சென்றுகொண்டிருந்தது. அதற்குப் பின்னால் சம்பந்தப்பட்டஅமைச்சரின் கார் வந்து கொண்டிருந்தது. அமைச்சரின் வேண்டுகோளின்படி முன்னால் சென்றபஸ்ஸை முந்துவதற்கு அமைச்சரின் டிரைவர் முயற்சி செய்தாராம்.

நெருக்கடியான ரோடு என்பதால் பஸ்டிரைவரால் அமைச்சரின் காருக்கு வழி கொடுக்க முடியவில்லை. இதைக்கூடபுரிந்துகொள்ள முடியாத அமைச்சருக்கு ஆத்திரம் ஏற்பட்டு விட்டதாம்.

### அமைச்சரின் அலட்சியம்

அதனால், விரிவான பாதைக்குச் சென்றவுடன் சர்விஸ் பஸ்சை முந்திக் கொண்டு காரை நிறுத்தி, பஸ்ஸை நிறுத்தச் செய்தாராம்.

பஸ் டிரைவரை பொல்லாத கோபத்துடன் திட்டியுள்ளார். பஸ் டிரைவரும் தனது நியாயமான நிலைமையைச் சொல்லி, காட்டமாகவே பதில் கொடுத்துள்ளார். இதனால், மேலும் ஆத்திரமடைந்த அமைச்சர் அற்பத்தனமான முறையில்— டிரைவர் தானே என்ற அலட்சியமானமுறையில்— டிரைவரின் கன்னத்தில் அடித்து விட்டாராம்.

பின்பு, பஸ் பங்களூருக்கு சென்றவுடன் நடந்த நிகழ்ச்சி பஸ் டிரைவர்களுக்கும், கண்டக்டர்களுக்கும் பரவி விடவே ஆத்திரமடைந்த அவர்கள் சர்விஸ் பஸ்களையும். சிடி பஸ்களையும நிறுத்தி விட்டார்கள். இதனால் இரண்டரை மணி நேரம போக்குவரத்து ஸ்தம்பித்து விட்டது.

### எம் எல் ஏ யின் தூது

இது பற்றி தெரிந்தவலது கம்யூனிஸ்டு கட்சியை சேர்ந்த கிருஷ்ணன் என்ற எம் எல் ஏ அமைச்சரால் அடிபட்டட டிரைவர் எந்த பஸ்ஸை ஓட்டி வந்தாரோ அந்த பஸ்கம்பெனி உரிமையாளரையும்,போக்குவரத்து அமைச்சரையும் சந்தித்துள்ளார். அவர்களை சந்தித்து பஸ்களை ஓட்டும்படி டிரைவர்களை கோருமாறு வேண்டியுள்ளார்.

### உறுதிமொழி

அதன் பின்பு கர்நாடக போக்குவரத்து அமைச்சர் ரங்கநாத என்பவர் எதிர்ப்புக் குரல் கொடுத்துக் கொண்டிருந்த டிரைவர்களிடையே பேசினர். அவர் டிரைவரை அடித்த அமைச்சரிடம் இவ் விஷயத்தை கொண்டு செல்வதாக தொழிலாளிகளிடம் உறுதி கூறினர்.

அதன் பின்பே டிரைவர்களும்,கண்டக்டர்களும் பஸ்களை ஓட்ட ஆரம்பித்தனர்.

---

### மின் தொழிலாளர்களின்

# சங்க செயலகம் திறப்பு விழா

திருப்பூர், ஜன 4—

1—1—74-ம் நாள் மாலை 6 மணிக்கு சி ஐ டி யூ யுடனும் மின் தொழிலாளர் மத்திய அமைப்புடனும் (சி. ஓ டி. இ. டபிள்யூ.) இணைந்த தமிழ் நாடு மின்சார அணைக்கட்டு தொழிலாளர் சங்கத்தின் அலுவலகம் அவினசி ரோட்டில் திறந்து வைக்கப்பட்டது.

சங்க அலுவலகத் திறப்பு விழாவுக்கு தோழர் பி ஆர் எஸ். மணி தலைமை வகித்தார்.

பின்னர் தோழர் கே எஸ் கருப்புசாமி (சி ஓ டி இ டபிள்யூ) மத்திய அமைப்பின் கொடியை ஏற்றினர். தோழர் டி எஸ் சங்கரநாராயணன் சங்க அலுவலகத்தைத் திறந்து வைத்தார்.

பின்னர் நடைபெற்ற பொதுக் கூட்டத்தில் தோழர் பி ஆர் எஸ் மணி, தோழர் டி எஸ் சங்கரநாராயணன், தோழர் கே. எஸ் கருப்புசாமி ஆகியோர் மின் வாரியத்தில் சி ஐ டி யூ நடத்திய போராட்டங்கள் பற்றியும், தமிழக அரசின் தொழிலாளர்விரோதப் போக்கையும், இந்தியா முழுவதும சி ஐ டி யூ நடத்திய போராட்டங்கள், இந்திராவின் டி ஐ ஆர் சட்டம், ரயில்வே தொழிலாளர் போராட்டம், மின்வாரியத்தில் வலது சாரி சம்மேளனத்தின் துரோக ஒப்பந்தங்களைப் பற்றியும், பேசினார்கள்.

பின்னர்தோழர் என் ஆர் அழகிரிசாமி நன்றி கூற கூட்டம் முடிந்தது.

---

# கோவை உப-தேர்தல் பிப்ரவரி 24-ல் வாக்குப் பதிவு

சென்னை, ஜன். 5—

கோவை நாடாளுமன்ற தொகுதியிலும், கோவை மேற்கு சட்டமன்ற தொகுதியிலும வரும் பிப்ரவரி 24-ம் தேதி வாக்குப் பதிவு நடைபெறும். இதே தேதியில்தான் பாண்டிச்சேரியிலும் வாக்குப் பதிவு நடைபெறுகிறது.

கோவை உப-தேர்தல் சம்பந்தமாக பிரதம தேர்தல் அதிகாரி விடுத்துள்ள அறிவிப்பில் கூறப்பட்டிருப்பது வருமாறு:—

ஜன. 21:- தேர்தல் பற்றி அறிவிப்பு.

ஜன. 28:- வேட்பு மனு தாக்கல் செய்ய கடைசி நாள்.

ஜன. 29:- வேட்பு மனுக்கள் தணிக்கை.

ஜன. 31:- வேட்பு மனுக்களைத் திரும்பப் பெற கடைசி நாள்.

பிப். 24:- வாக்குப்பதிவு

---

# மதுரை நெசவாளர் போராட்டம் நீடிக்கிறது

மதுரை, ஜன. 4—

மதுரைநகர் செல்லூர் பகுதியிலுள்ள சுமார் 10 ஆயிரம் நெசவுத் தொழிலாளர்கள் கூலி உயர்வும் போனஸ் கோரியும் கடந்த 15 தினங்களாக போராடினார்கள்.

விலைவாசி உயர்வு விஷம் போல் ஏறுவதின் மூலம் பல்வேறு தொழிலாளர்கள் போராடி சம்பள உயர்வு, போனஸ் உயர்வு பெற்ற பிறகு கைநெசவுத் தொழிலாளர்கள் தங்களுடைய வாழ்க்கையை சரிக்கட்ட முடியாத நிலையில் கூலி உயர்வு, போனஸ் கோரிக்கைகளை வைத்து சர்வ தொழிற்சங்கமும் இணைந்து ரூபாய் ஒன்றுக்கு 50 சதம் கூலி உயர்வும், ரூபாய் ஒன்றுக்கு 15 சதம் போனஸ் கோரியும் கடந்த நவம்பர் மாதம் 29-ந் தேதி மாஸ்டர் வீவர்களுக்கு கடிதங்கள் எழுதியும் 10—12—73-ம் தேதி மாவட்ட ஆட்சித் தலைவரிடம் கோரிக்கைகள் அடங்கிய மகஜர் கொடுத்தும் 16—12—73-ல் டி. எஸ். பி., ஆர். டி. ஓ. ஆகியோர் முன்னிலையில் பேச்சு வார்த்தை நடத்தியும், மாஸ்டர் வீவர்கள் கோரிக்கையை ஏற்க மறுத்த காரணத்தினால் 17—12—73-ம் தேதி முதல் தொழிலாளர் அனைவரும் வேலைநிறுத்தத்தில் ஈடுபட்டார்கள்.

மீண்டும் 19-12-73ம் தேதி டி. எஸ், பி. ஆர். டி. ஓ. முன்னிலையில் பேச்சு வார்த்தை நடத்தியும் பலனளிக்காததால் தொழிலாளர்கள் ஒன்றுபட்டு சட்டபூர்வமான போராட்டத்தில் ஈடுபட்டார்கள். ஆனால் ஒன்றுபட்டு போராடுவதைக் கண்ட மாஸ்டர் வீவர்கள் போராட்டத்தை உடைக்கும் நோக்குடன் இடத்திற்கு இடம் லாபம் வித்தியாசமிருந்தும் கோரிக்கையை குறைகூறியும் அரசியல் சாயம் பூசியும் அராஜகத்தை ஏற்படுத்த சில அசம்பாவித சம்பவங்களை மாஸ்டர் வீவர்களே தூண்டிவிட்டனர். தொழிற்சங்க தலைவர்கள்மீது பழிசுமத்த முயற்சித்தும், நூல்விலை சரிவை காரணம் காட்டி நஷ்டம் என்று கூறிபோராட்டத்தை உடைக்க முயற்சித்தார்கள்.

ஆனால் கடந்த சிலமாதங்களுக்கு முன்பாக நூல் விலை உயர்வை எதிர்த்து நியாயவிலையில் நூல் கிடைக்க வேண்டுமென்று கைநெசவுத் தொழிலாளர்கள் போராடியதின் விளைவாக மாஸ்டர் வீவர்களுக்கு நியாயவிலையில்நூல்கிடைத்ததைக்கூட உற்பத்தியில் ஈடுபடுத்தாமல் கள்ளமார்க்கெட்டில் விற்றும் நூல்விலை உயர்வை காரணம் காட்டி துணி விலையை 20 சதம் முதல் 25 சதம் வரை உயர்த்தி விற்பனை செய்தும் அபரிமிதமான லாபம் அடித்திருந்தும் 27—12—78-ல் டி. எஸ். பி. முன் நடந்த பேச்சுவார்த்தையில் சில மாஸ்டர் வீவர்கள் ஏற்றுக் கொண்ட பிறகும் அதை அமுல் நடத்த மறுத்து திருவாளர்கள் டி. மாரிமுத்து சோ. கருப்பையா, ஏ. பி. ராஜேந்திரன்; ஏ, பழனிச்சாமி, கே. கருப்பசாமி,சரஸ்வதி. பொன்னுசாமி,மதுரை மணி ஆகியோர்கள் அதிலும் குறிப்பாக திருவாளர் சோ. கருப்பையா முன்னின்று போராட்டத்தை முடிக்க விடாமல் தொழிலாளர்களை பட்டினிக்குள்ளாக்கினர்கள்.

இந்நிலையில் தொழிற்சங்கங்கள்தான் பட்டினியில் தொழிலாளிகளை தள்ளியது என்று நோட்டீஸ் போட்ட தரங்கெட்ட மாஸ்டர் வீவர்களின் குழ்ச்சிகளை முறியடிக்க உறுதியுடனும் ஒற்றுமையுடனும் ஒன்றுபட்டு உரிமைகளைப் பெற எல்லா கைநெசவுத் தொழிலாளர்களும் வீறிட்டெழுந்துள்ளார்கள்.

---

### சிலி நாட்டில்

# மிருக ஆட்சியாளர்களின் மிருக அடக்குமுறை

சாண்டியாகோ, ஜன. 5—

சிலி நாட்டு ராணுவ சர்வாதிகாரம் அந்நாட்டு மக்கள் மீது காட்டுமிராண்டித்தனமான அடக்குமுறையை ஏவிவிடுகிறது.

### திடீர் சோதனை ஏராளமானோர் கைது

மக்களின் ஆதரவற்ற அவ்வரசாங்கம் மக்களை அடக்கி ஒடுக்கி விடுவதன் மூலம் தனது ஆட்சியை நிலைநிறுத்திக் கொள்ளப் பார்க்கிறது.

ராணுவத்தினரைக் கொண்டும், போலீசைக் கொண்டும் திடீர் திடீரென்று வீடுகளில்சோதனையிடுவதும், பெருவாரியானவர்களை கைது செய்வதுமாக இருக்கிறது.

மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட ஜனாதிபதி அலெண்டேயை கொலை செய்து ஆட்சியை கைப்பற்றியதிலிருந்து இதே முறையைத்தான் அக்கொடூர ஆட்சி கடைப்பிடித்து வருகிறது. எனினும் மக்கள் அடக்குமுறைக்கு அஞ்சாமல் ராணுவ ஆட்சியை ஒரு முடிவுக்கு கொண்டு வர பல்வேறு வழிகளில் தயார் செய்து வருகின்றனர்.

### 18 பேர் தூக்கிலிடப்பட்டனர்

சிலி நாட்டு கொடூர ராணுவஆட்சியின் அடக்குமுறையின் தொடர்ச்சியாக சமீபத்தில் 18 பேரை கைது செய்து தூக்கிலிட்டு கொன்றுள்ளனர்.

### கம்யூனிஸ்ட் கட்சி தலைவர்

சிலி நாட்டு கம்யூனிஸ்ட் கட்சித் தலைவர் சாமுவெல் ரைஸ்ல்ம் தற்போது சான்டியாகோவில் உள்ள கொடுஞ் சிறைக்குள் தள்ளப்பட்டிருக்கிறார்.

சிறைச்சாலைக்குள் அவர் கொடுமையான முறையில் நடத்தப்படுகிறார். அவருக்கு தேவையான வைத்திய வசதிகள் கொடுக்கப்படுவதில்லை. அவரும் தூக்கிலிடப்படக்கூடும் எனத் தெரிகிறது.

### மக்கள் தயாராகின்றனர்

சிலி நாட்டு காட்டுமிராண்டி அரசாங்கத்தின் அடக்குமுறை எந்த அளவுக்கு அதிகமாகிறதோ அதைவிட வேகமாக மக்கள் ராணுவ ஆட்சிக்கு எதிராக தங்களை தயார் படுத்தி வருகிறார்கள்.

---

# பயங்கர நெருக்கடியில் மூழ்கிடும் அமெரிக்கா

வாஷிங்டன், ஜன. 3—

1973ம் ஆண்டு அமெரிக்க உழைக்கும் மக்களின் வாழ்க்கை தரம் மேலும் வீழ்ச்சியடைந்துள்ளது.

சென்ற 12 மாதகாலத்தில், நாட்டின் பயனீட்டுப் பண்டங்களின் விலைகள் சராசரி 8 சதவிகிதம் உயர்ந்துள்ளன;உணவுப்பொருள்களின் விலைகள் 20 சதவிகிதம் உயர்ந்துள்ளன. 1973ம் ஆண்டு, மோசமான பணவீக்கம் அமெரிக்காவில தோன்றியதாக அமெரிக்க காங்கிரசின் கூட்டுப் பொருளாதாரக்கமிட்டியின் துணைத்தலைவரான செனடர் ஏ. பையிள் கூறினர். பொருளாதாரக் கொள்கையில் நிர்வாகம் செய்துள்ள தவறுகளின் விளைவே நாட்டில். இத்தகைய நிலைமை ஏற்பட்டதற்கான காரணம்.

விலைவாசி உயர்வின் காரணமாக ஏற்பட்ட சுமையை அமெரிக்க நடுத்தரக் குடும்பங்களும், கீழ் மட்டத்திலுள்ளவர்களும், பென்சன் பெறுபவர்களுமே தாங்க வேண்டியுள்ளது. நிர்வாகத்தினர் ஏற்படுத்தியுள்ள வரையறைகளின் விளைவாக பண வீக்கத்தைச் சற்றும் எட்டிப் பிடிக்க முடியாத அளவில். சம்பளங்களும ஊதியங்களும் பின்தங்கியுள்ளன. அதன் பயனாக, சாதாரண அமெரிக்கக் குடும்பத்தின் வாங்கும்திறன் பெருவீழ்ச்சியடைந்துள்ளது. நிர்வாகத்தின் பொருளாதாரக்கொள்கை, அமெரிக்க உழைக்கும் மக்களை மிகக் கடினமான சூழ்நிலைக்குத் தள்ளியுள்ளது என்று செனட்டர் கம்ப்ரே கூறியுள்ளார். ஊதியங்களையும, சம்பளங்களையும் குறைப்பதற்கு மட்டுமே இந்தக் கொள்கை பலனளித்துள்ளதேயன்றி,பிற எல்லா அம்சங்களிலும் அதுதோல்வியடைந்துள்ளது,

எரி பொருள் நெருக்கடி தீவிரமடைந்திருப்பது, உழைக்கும் மக்களின் நிலையை மேலும் மோசமாக்கியுள்ளது.எரிபொருள் பற்றுக்குறையின் காரணமாக பல நிறுவனங்களும், உற்பத்தியைக்குறைதது உழைப்பாளர்களை வேலை நீக்கம் செய்துள்ளன. நிபுணர்களின் கருத்துப்படி, அடுத்த சில மாதங்களில் அமெரிக்காவில் வேலையில்லாத் திண்டாட்டத்தின் அளவு மேலும் 8-10 சதவிகிதம் உயரும் என்று தெரிய வருகிறது.

1974 ம் ஆண்டு மொத்த வாழ்க்கைச் செலவின் அளவு குறைந்த பட்சம் 2700 கோடி டாலர்களாக உருயம் என்று பொருளாதார ஆலோசகர்கள் குழுவின் தலைவரான ஸ்டீன் கூறினர்.

சென்ற பத்தாண்டு காலத்தில் அண்மைக் காலததில்தான் அமெரிக்காவில் மிக உயர்ந்தஅளவு வேலையில்லாத்திண்டாட்டமும் பண வீக்கமும்பொருளாதார மந்தமும் ஏற்பட்டுள்ளதாக செனட்டர் இ. கென்னடி கூறினர். புதியதொரு வீழ்ச்சி எதிர்நோக்கியுள்ளது, என்றும் குறிப்பிட்டார்.

---

### பழிவாங்கலை எதிர்த்து

# பேட்டை இந்து கல்லூரி மாணவர்கள் உண்ணாவிரதம்

## போராட்டம் தீவிரமடைகிறது

திருநெல்வேலி, ஜன. 4—

திருநெல்வேலி பேட்டை இந்து கல்லூரியிலிருந்து விலக்கப்பட்ட 26 மாணவர்களை மீண்டும் சேர்க்கக் கோரி கடந்த 12 நாட்களாக மாணவர்கள் தொடர் உண்ணாவிரதம் இருந்து வருகின்றனர்.

போராட்டத்தை தீவிரப் படுத்துவது பற்றி ஆலோசிக்க அனைத்துக் கல்லூரி மாணவர் தலைவர்கள் கூட்டம் ஜனவரி 2ந்தேதி நடைபெற்றது.

கூட்டத்திற்கு சேவியர்ஸ் கல்லூரி மாணவர் ஆதித்தன், இந்து கல்லூரி மாணவர் தலைவர் தனபால்செல்வராஜ், சதக்அப்துல்லா கல்லூரி மாணவர் தலைவர் பக்ருதீன் மற்றும் தூத்துக்குடி வ. உ. சி. கல்லூரி மாணவர்கள், சாயர்புரம் போப் கல்லூரி மாணவர்கள், ஜான்ஸ் கல்லூரி மாணவர்கள் மற்றும் உயர் நிலைப் பள்ளி மாணவர்களும் வருகை தந்திருந்தனர்.

கூட்டத்தில் ஜனவரி 5ந் தேதிக்குள் 26 மாணவர்களை இந்து கல்லூரி நிர்வாகம் சேர்க்காவிட்டால் மாணவர்கள் காலவரையற்ற உண்ணாவிரதப் போராட்டத்தை மேற்கொள்ள முடிவு செய்யப்பட்டது. மேலும் அனைத்து கல்லூரி மாணவர் தலைவர்களும் காலவரையற்ற உண்ணாவிரதப் போராட்டத்தை மேற்கொள்ளுவார்கள்.

# வியத்நாம் மக்களுக்கு ஆதரவு தாரீர்

## சி. ஐ. டி. யூ. மாநாட்டுக்கு வடவியத்நாம் தூதரகம் செய்தி

சென்னை, ஜன 4.-

சி ஐ டி யூ வின் தமிழ் மாநில 2-வது மாநாடு அண்மையில் இங்கு நடைபெற்றபோது அந்த மாநாட்டை வாழ்த்தி புதுடில்லியிலுள்ள வடவியட்நாம் தூதரகத்திலிருந்து செய்தி வந்திருக்கிறது.

தூதரக அதிகாரி என். எச். லி கையெழுத்திட்டு அனுப்பியிருந்த அந்தச் செய்தி மாநாட்டில் வாசிக்கப் பட்டபோது பிரதிநிதிகள் நீண்ட கரவொலி எழுப்பியும் "வீர வியட்நாம் வாழ்க" என்று கோஷம் எழுப்பியும் மகிழ்ச்சி ஆரவாரம் செய்தார்கள்.

வடவியட்நாம் தூதரகத்திலிருந்து வந்த செய்தி வருமாறு:—

சென்னையில் நடக்க இருக்கும் கண்காட்சிக்கு 80 புகைப்படங்களை இத்துடன் அனுப்பியுள்ளேன்.

தமிழ்நாடு சி ஐ டி யூ, வியத்நாமிய மக்கள் போராட்டத்திற்கு அளித்துள்ள இடைவிடாத, உறுதியான ஆதரவிற்கு உங்கள் மூலமாக எங்கள் நன்றியையும தோழமை உணர்வுகளையும் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன்.

அமெரிக்க ஆக்கிரப்பை எதிர்த்து 20 ஆண்டுகாலமாக நடந்துவரும் தேசிய விடுதலைப் போராட்டம் ஒரு மகத்தான வெற்றியைக் கண்டுள்ளது. வியத்நாமிய யுத்தத்தை நிறுத்தி அமைதியை நிலைநாட்டும்படியான பாரிஸ் சமாதான உடன்படிக்கையில் கையெழுத்திட வேண்டிய நிர்ப்பந்தம் அமெரிக்காவிற்கு ஏற்பட்டது.

தன்னுடைய 5 லட்சம் துருப்புகளை தென்வித்நாமிலிருந்து வாபஸ் வாங்க வேண்டிய அவசியமும் அமெரிக்காவிற்கு உண்டாயிற்று.

அமெரிக்க ஏகாதிபத்தியத்திற்கு படுகேவலமான தோல்வி ஏற்பட்ட போதிலும், தென் வியத்நாமோடு உள்ள ராணுவத் தொடர்பையோ அல்லது அம்மக்களின் உள்நாட்டு விவகாரங்களில் குறுக்கிடுவதையோ அமெரிக்கா நிறுத்திவிடவில்லை. சைகோனில் உள்ள பொம்மை நிர்வாகத்தையும் ராணுவத்தையும் உபயோகித்து அவற்றின் மூலம் தன் நவீன காலனி ஆதிக்கத்தை தென்வியத்நாம் மீது சுமத்த விரும்புகிறது. பாரிஸ் ஒப்பந்தம் ஆன பிறகும், கடந்த 10 மாத காலத்தில், ஒப்பந்தத்தின் அதிமுக்கியமான பின் கண்ட ஷரத்துக்களை அமெரிக்காவும் சைகோனின் பொம்மை நிர்வாகமும் மீறியிருக்கின்றன:

— யுத்தத்தை நிறுத்தும் உத்திரவு;

— மக்களுடைய ஜனநாயக உரிமைகளுக்கு பாதுகாப்பு;

— அரசியல் கைதிகளை திருப்பி அனுப்புதல்.

### 34 ஆயிரம் தடவை ஊடுருவல்கள்

தென்வியத்நாம் புரட்சி அரசின் அதிகாரத்துக்குட்பட்ட பகுதிகளில் 33,792 முறைகள் சைகோன் நிர்வாகம் ராணுவ ஊடுருவலை நடத்தியிருக்கிறது. அதனுடைய விமானங்கள் மக்கள் குடியிருப்புப் பகுதிகளில் குண்டு வீச்சை நடத்தியிருக்கின்றன. சுமார் 14,000 விமானத் தாகுதல்கள் நடந்துள்ளன.

அதேசமயம் பாசிச தியூ கோஷ்டியினரின் அதிகாரத்தில் இருக்கும் பகுதிகளில் அடக்குமுறைதீவிரப் படுத்தப்பட்டிருக்கிறது, வீடுகளும் பயிர்களும் அழிக்கப்பட்டு 10 லட்சத்திற்கு மேற்பட்டவர்கள் காராக்கிரகத்தில் அடைக்கப்பட்டுள்ளனர்.

தென்வியத்நாமின் ஆயிரக்கணக்கான சிறைகளில் வாடிக்கொண்டிருக்கும் 2 லட்சத்துக்கும் மேற்பட்ட தேச பக்தர்களை தியூ நிர்வாகம் திருப்பி அனுப்ப மறுக்கிறது.

அமெரிக்க ஏகாதிபத்தியத்தின் துணையும் தூண்டுதலும் இல்லையென்றால் தியூ இத்துணை ஆணவமாக சமாதான ஒப்பந்தத்தை ஒருக்காலும் மீறியிருக்க முடியாது. தென் வியத்நாமிலுள்ள தன்னுடைய ராணுவத்தளங்களை எடுத்துவிட அமெரிக்கா மறுத்துவிட்டது.

அத்தோடு பாரிஸ் ஒப்பந்தத்திற்கு பிறகு அமெரிக்கா கள்ளத்தனமாக தியூவிற்கு 6,30,000 டன் ஆயுதங்களை 500 ராணுவ விமானங்கள் 300 டாங்கிகள் உள்பட கொடுத்திருக்கிறது. 300 கோடி ரூபாய் ராணுவ உதவியாகவும்சைகானிற்கு கிடைத்திருக்கிறது. தற்சமயம் தென்வியத்நாமின் ராணுவத்தை நேரடியாகக் கண்காணித்துக் கொண்டிருக்கும் 24,000 அமெரிக்க துருப்புகள் சாதாரண ஜனங்களைப்போன்ற வேடம் அணிந்துள்ளன. ஜனநாயக வியத்நாமிய குடியரசில் வேவு பார்க்கும் வேலைகளில் பலமுறை அமெரிக்க விமானங்கள் ஈடுபட்டிருக்கின்றன.

இத்தகைய செயல்களினால தென் வியதநாமில் மிக நெருக்கடியான சூழ்நிலை ஏற்பட்டுள்ளது இருப்பினும், ஜனநாயக வியத்நாமிய குடியரசும், தென் வியத்நாமின் புரட்சி அரசும் பாரிஸ் உடன்பாட்டை முழுமையாக அமுல் படுத்த வேண்டுமென்ற உறுதியில் சிறிதும் தளரவில்லை. அதே சமயம் அமெரிக்காவும் சைகோன் நிர்வாகமும் கூட அவ்வாறே செய்ய வேண்டுமென்று வலியுறுத்துகிறது.

வியத்நாமிய மக்களுடைய வாழ்க்கையையும் சொத்துக்களையும், விடுவிக்கப்பட்ட பகுதிகளையும் பாதுகாக்கும் பொருட்டு புரட்சி அரசும் அதன் படைகளும் தியூ கோஷ்டியினரின் சதித் திட்டங்களுக்குச் சரியான பதிலடி கொடுத்துவருகின்றன. சமாதானத்துக்கும் தேசிய ஒருமைப்பாட்டிற்கும் வேட்டு வைக்கும் கொள்கையை தியூ கோஷ்டியினர் கைவிடவில்லை என்றால் அவர்கள் பயங்கர தோல்வியையே அடைவார்கள்.

### நாங்கள் கோருவது

1) தென் வியட்நாமின் உள்நாட்டு விவகாரத்தில் தலையிடுவதையும் அதோடு கொண்டுள்ள ராணுவத் தொடர்பையும் அமெரிக்கா உடனடியாக நிறுத்த வேண்டும்.

2) ஜனநாயக வியட்நாமிய குடியரசுக்கு எதிரான நாச வேலைகளை நிறுத்த வேண்டும்.

3) ராணுவ ஊடுருவல்களையும், விமானத் தாக்குதல்களையும் தியூ நிர்வாகம் உடனடியாக நிறுத்தவேண்டும்.

4) காட்டு மிராண்டித் தனமான போலீஸ் அடக்கு முறைகளை உடனடியாக நிறுத்தி மக்களுடைய ஜனநாயக உரிமைகளை பாதுகாக்க வேண்டும்.

5) 2 லட்சத்துக்கும் மேற்பட்ட அரசியல் கைதிகளை உடனடியாக தென் வியட்நாமிய புரட்சி அரசுக்லிதிருப்பி அனுப்ப வேண்டும்.

6) அமெரிக்காவால் ஊக்குவிக்கப்படும் பாசிச யுத்த வெறி பிடித்த தியு கோஷ்டியினரின் ரத்தக்கறைபடிந்த கைகளை கட்டுவதற்குதென் வியட்நாமிய புரட்சி அரசும் வியட்நாமிய குடியரசும் எடுக்கும் எல்லா தேவையான, நியாயமானநடவடிக்கைகளுக்கும் முழுமையான ஆதரவு அளிக்க வேண்டும்.

பாரிஸ் உடன்பாட்டை அமுல் செய்யவும், தங்களுடைய நாட்டின் புனரமைப்பிற்காகவும், கடும்போராட்டத்தில் ஈடுபட்டுள்ள வியட்நாமிய மக்களுக்கு ஆதரவாக இம்மாநாடு குரல் கொடுக்கும் என்று நம்புகிறோம்.

உங்களுடைய மாநாடு வெற்றிகரமாக நடப்பதற்கு எங்களுடைய வாழ்த்துக்கள்.

---

## 22 கோடி டன்

## சோவியத் நாட்டில் தானிய உற்பத்தி

மாஸ்கோ, ஜன. 5—

சோவியத் நாட்டில் பருவநிலை சாதகமாக இல்லையானலும் விவசாயத் துறையில் தீவிர கவனம் செலுத்தி - விவசாயக் கருவிகளையும் தாது உரங்களையும் கூடுதலாகப் பயன்படுத்தியதால் - திட்டமிட்டதைவிட இந்த ஆண்டு கூடுதலாக தானிய உற்பத்தி அதிகரித்து உள்ளது.

இவ்வாண்டு மொத்தம் 22 கோடியே 25 லட்சம் டன் தானியம் உற்பத்தி ஆகியுள்ளது.

இந்தியாவில் பசுமைப் புரட்சி முடிந்தும் 10 கோடி டன் தான்யம் தான் உற்பத்தி செய்ய முடிந்தது.

சோவியத் யூனியனில் பருத்தி விளைச்சலும் நன்ருக இருக்கிறது. இந்த ஆண்டு 76 லட்சம் டன் பருத்தி அறுவடைஆயிற்று.

---

# மனிதர்களைக் கொல்வதற்காகவே மருந்து விலை தயாரிக்கின்றனர்

## தலைவலி மருந்தினுல் தலைவலி தீரவில்லை வயிற்றுவலியும் வந்து சேர்ந்தது

பரந்த அளவில் கலப்படம் செய்யவும் கொள்ளை லாபம் அடிக்கவும் கூடிய ஒரு தொழில் இருக்கிறதென்ருல், மருந்துத் தொழிலை முதன்மையாகச் சொல்லலாம்,

நமது நாட்டிலே உள்ள மருந்து உற்பத்தியில் 70 சதமான உற்பத்தி 45 அன்னியக் கம்பெனிகளின் வசம் அடங்கியுள்ளது.

மருந்து தொழிலில் அக்கம்பெனிகள் ஏகபோகம் செலுத்துவதால், அவர்கள் வைத்ததுதான் மருந்தின் விலையாக இருக்கிறது.

மருந்தின் விலை மிகவும் மலிவாக இருப்பதற்குப் பதிலாக, மிதவும் உயர்ந்திருக்கிறதே, இதன் காரணம் என்ன என்று அறிய மத்திய சர்க்கார் ஒரு குழுவை அமைத்தது.

இந்தக் குழு "உற்பத்திச் செலவும் விலையும் எப்படி இருக்கின்றது என்பதை அறியமருந்துக் கம்பெனிகளுக்கெல்லாம் சென்று விசாரணை நடத்தியது,

### கலப்படம்

அப்படி விசாரணை செய்ததில், அதிர்ச்சியடையக் கூடிய அளவுக்கு லாபக்கொள்ளை நடப்பதை அறிந்தனர்.

மருந்து உற்பத்திசெய்யும் தலைமையகத்தைவிட்டு- மருந்துக் கம்பெனியின் கிளைகளுக்கு அந்த மருந்துகள் வந்து சேருவதற்குள், எத்தனையோ மடங்கு விலைகள் ஏறிவிடுகின்றன,

மருந்துக்கம்பெனிகளின் கணக்குப் புத்தகத்தைப் பார்த்தால், உண்மை விபரம இருக்காது. இப்படி பலமடங்கு விலையை ஏற்றி படு கொள்ளை அடிப்பது மட்டுமல்ல,

### பல மடங்கு விலை

ஆபத்து விளைவிக்கக்கூடியகலப்படங்களும் நடக்கின்றன. இதுபற்றி இந்திய உபயோகிப்போர் கவுன்சில் ஒரு சர்வே நடத்தியது,

அயோக்கிய சிகாமணிகள் பழைய டப்பாக்களை வாங்கிவந்து, அதில் கலப்பட மருந்துக்களை அடைத்து விடுகிருர்கள் என்றும்-இதை ஒரிஜினல் பெட்டிகளில் வைத்து- சிறிது விலையையும் குறைத்து, சில்லரை வியாபாரிகளுக்கு விற்றுவிடுகிருர்களாம்.

### தலைவலி தீரவில்லை வயிற்று வலி வந்தது

திடீரென்று ஒரு கம்பெனியில் புகுந்து ஒரு மாத்திரையை சோதனை செய்ததில், "இது தலைவலி மாத்திரை சாரிடான்" என்று கம்பெனியில் உள்ளவர்கள் சொன்னுர்கள். ஆனல் லேபிள் சோரோடான என்று இருந்தது.

இந்த மருந்தை உட்கொண்டதில், உள்ள தலைவலியும் தீரவில்லை. தீராதது மட்டுருல்ல புதிதாக வயிற்றுவலி வேறு வந்து சேர்ந்தது.

கோடோபெரின் மாத்திரையைச் சோதனைசெய்தபோது— அது கோடோபெரினக இல்லை. ஆஸ்பிரின மருந்தையும் சாக்குக் கட்டிப் (சாக்பீஸ்] பொடியையும் சேர்த்துச் செய்ததாக இருந்தது,

சாக்குக் கட்டிப் பவுடர் வயிற்றுக்குள்போனல், அது சிறுநீர்ப் பையில் கல்லாக மாறி, அவஸ்தை உண்டாக்கும். ஆஸ்பிரின மாத்திரம் உட்கொண்டால் அது இருதயக்கோளாறை உண்டாக்கும்

### கலப்பட மருந்தால் 50 குழந்தைகள் சாவு

பஞ்சாபில், மோகா நகரில், கலப்பட மாத்திரைகளைச் சாப்பிட்ட 50 குழந்தைகள் இறந்து விட்டன. அந்த மருந்தை பரிசீலித்த போது, அது எலிப் பாஷாணம் எனத் தெரிரிய வந்தது.

இது மாதிரி போலி மருந்துகளை 'உட்கொண்டதின் காரணமாக, தமிழ் நாட்டிலும் பஞ்சாபிலும், மற்றும் பல இடங்களிலும் சாவுகள் ஏற்பட்டிருக்கின்றன.

வட இந்தியாவில் மருந்து இன்ஸ்பெகடர்கள் ஒரு சிலரே இருக்கிருர்கள். ஒரிசாவில, மருந்து சோதனைக் கூடம் என்று ஒன்று கூட இல்லை.

### அடிக்கப் படை உண்டு ஆனல் காப்பாற்ற ...?

அரசாங்கத்துக்கு இதையெல்லாம் கவனிக்க நேரமுமில்லை; செலவழிக்கப் பணமுமில்லை,

ஆனல், உளவாளிப்படைகளை விஸ்தரிக்கவும்—போலீஸ் படையையும், மத்திய ரிசர்வ் போலீசையும், மற்றுமுள்ள அடக்குமுறை இயந்திரங்களையும் அதிகரிக்க நேரமிருக்கிறது. 'அதற்கெல்லாம் தீனி போடவும் பணம் இருக்கிறது!

அரசாங்கத்தின் இந்தப் போக்கினுல்தான், உணவுக் கலப்படமும், மருந்துக் கலப்படமும் கேள்வி கேட்பாரற்று அதிகமாகி வருகின்றன.

### லஞ்ச அதிகாரிகள்

கடந்த மாதம் நடந்த காங்கிரஸ் பாலிமெண்டரி கமிட்டிக் கூட்டத்தில் ஓர் உறுப்பினர் ஒரு விஷயத்தைப் புட்டு வைத்தார்.

அதாவது, உணவு கலப்படங்களைக் கண்டுபிடிக்க நியமிக்கப்பட ஒரு இன்ஸ்பெக்டருக்கு மட்டும், மாதம் ரூ 10,000 வருமானம் கிடைத்திருக்கிறது என்று கூறினுர்.

### இந்திரா உபதேசம்

இங்கிலையில் பிரதமர் இந்திராகாந்தி என்ன செய்கிருர். கலப்பட வியாபாரிகளைச் சமூக பகிஸ்காரம் செய்யுங்கள் என்று மக்களுக்கு உபதேசிக்கிருர். அவர்கள் மீது கடுமையான நடவடிக்கை எடுப்பதற்குபதிலாக, இவ்வாறு பொறுப்பைத் தட்டிக்கழிக்கிருர்.

### தேசவுடைமை ஆக்குக

மருந்துத் தொழிலை தேசவுடைமை ஆக்கு என்று நெடுங்காலமாக நாட்டு மக்கள் கோரி வருகிருர்கள். அதைச் செய்யாவிட்டாலும் கூட, நேரய்க்கிருமிகளை ஒழிக்கும் மருந்துகளையும், வைட்டமின் மாத்திரைகளையும், பொதுவாகப் பயன்படுத்தும் மருந்து—மாத்திரைகளையும், ஊசி மருந்துகளையாவது அரசாங்கத்துறையில் உற்பத்தி செய்யவேண்டும் என்று டாக்டர்கள் பலரும் அரசாங்கத்துக்கு வேண்டுகோள் விட்டுள்ளார்கள்.

இந்த அறிவுரையெல்லாம் அரசின் செவிட்டுக்காதிலே நுழையப்போகிறதா? பெரிய முதலாளிகளைத் தாக்காத வரையில் ஒன்றுமே நடக்காது.

---

## மேற்கு வங்கத்தில்

# "சித்தார்த்த சங்கர் ரே பதவியை விட்டு போக வேண்டும்"

## இந்திரா காங்கிரசுக்குள் கலகக் கொடி

கல்கத்தா, ஜன. 5—

கொஞ்ச நாட்களாகவே, பத்திரிகைகளில் மே.வங்க முதலமைச்சர் சித்தார்த்த சங்கர்ரே, மத்திய மந்திரி சபைக்கோ அல்லது வேறு பதவிக்கோ மாற்றப்படலாம் என்ற பேச்சு அடிபடுகிறது.

இதற்குகாரணம் என்ன? 1972-ம் ஆண்டு போலித் தேர்தல் நடத்தி வெற்றி பெற்றபின் மேற்கு வங்க மாநிலத்தில் லட்சக்கணக்கான படித்த இளைஞர்களுக்கு வேலை வாய்ப்புக்களை ஏற்படுத்தி கிராமம் கிராமமாக மின்சார இணைப்பு கொடுத்து, மாநிலம்முழுவதும் அமைதி பூங்காவாக மாற்றி, பாலும்,தேனும்ஓடச்செய்து களைப்பு மேலீட்டால் அவர்வேறு பதவிக்கு ஓய்வெடுக்கச் செல்லவில்லை. காங்கிரசுக்குள் நடக்கும் கோஷ்டிச்சண்டையும், ஒன்றையொன்று, குரல்வளையைப் பிடித்துக்கொண்டு அடித்துக்கொண்டு ரகளைசெய்வதும் அதனைச் சமாதானப் படுத்தமுடியாமல் அவர் தவிப்பதுதான் ரே,வேறிடம் செல்ல காரணமாகும்

### ஒவ்வொரு அரங்கத்திலும் எதிர் கோஷ்டிகள்

காங்கிரஸ் கட்சியின் மாநிலத் தலைவர், பிஜாய் சிங்நகார், சித்தார்த்தசங்கர் ரேக்கு எதிராக இருக்கிருர். மாணவர் காங்கிரஸ்கட்சிக்கு (சத்ர பரிசத்துக்கு) எதிராக 'கல்வியைகாப்போம்' என்று ஒரு கோஷ்டி, செயல்பட்டு வருகிறது. இளைஞர் காங்கிரசுக்கு எதிராக, இளைஞர் போராட்டக்கமிட்டி செயல்பட்டுவருகிறது. ஐ. என். டி. யு. சி,க்கு எதிராக, தேசீயதொழிலாளர்இணைப புக்குழு செயல்பட்டு வருகிறது.

இந்தக்கோஷ்டிச் சண்டை வெறும் வாய்ச் சண்டையோடு நிற்காமல், கிட்டத்தட்ட 30 உயிர்களைப் பலிவாங்கியிருக்கிறது. ஒரு எம். எல். ஏ. கண்டதுண்டமாக வெட்டப்பட்டார். ரே, பதவியிலிருந்து இரக்கப்பட்டால், அந்த இடத்தில் அமருவதற்காகவும் இந்தப் போட்டி நடக்கிறது.

### ஜனுபதி ஆட்சி வருமென ரே மிரட்டல்

காங்கிரஸ் கட்சியின், மாநிலக்குழு, கடந்தஓராண்டாக நடைபெற முடியவில்லை. சித்தார்த்தசங்கர் ரே, பதவிச்சண்டையில் ஈடுபட்டிருக்கும் கடசிக்காரர்களையும், எம். எல்.ஏ.க்களையும் கூட்டி, சண்டையை நிறுத்தும் படியும். இல்லாவிட்டால், மந்திரி சபையை ராஜினுமாச் செய்து, ஜனுதிபதி ஆட்சியை ஏற்படுத்தவேண்டி வரும் என்றும் மிரட்டினுர். இருந்தும இந்த கோஷ்டி மோதல் நிற்கவில்லை நிற்கப்போவதாகவும் தெரியவில்லை.

முதலமைச்சருக்குஎதிராக செயல்படும்,பிஜாய்சிங்நிகாரும். அவரை எதிர்க்கும் தாஸ் — முன்ஷி கோஷ்டியும் இப்போது கட்சியின் ஐக்கியம் பற்றி ஒரு தீர்மானம் நிறைவேற்றி இருக்கிருர்கள். 'ஒற்றுமையை நிலைநிறுத்த நாம் இங்கு ஒரு தீர்மானம் நிறைவேற்றி இருக்கிறோம் ......சித்தார்த்த பாபுவின் மீது இன்னும் நம்பிக்கை இருக்கிறது.......பத்திரிகைகளில், அவர் முதலமந்திரி பதவியை விட்டுவிட விரும்புவதாக பார்க்கிறோம்...... நாம் அப்படி பதவி விலக அனுமதிக்கப் போவதில்லை......"

இந்த வாசகத்தின் அர்த்தத்தை புரிந்து கொள்ள முடியும் என்று நினைக்கிறோம். காங்கிரஸ் கட்சியின் அகராதியில் அர்த்தமே வேறுதான்.

---

## உத்திரப்பிரதேசத்திலும்

# கொள்முதல் திட்டம் தோல்வி

போபால், ஜன 6 |

மத்திய பிரதேச அரசாங்கத்தின் கொள்முதல் திட்டம் தோல்வியை தழுவிக் கொண்டது என உணவுக் கொள்முதல்கார்பரேஷனே ஒப்புக் கொண்டுள்ளது.

### அரசே அனுமதித்தது

உபரி அரிசி உற்பத்தி மாநிலங்களில் மத்தியப் பிரதேசமும் ஒன்று. எனினும் 6லட்சம்டன் அரிசி கொளமுதல் குறியாகக் கொண்டிருந்தாலும் கொள்முதல் செய்தது 80 ஆயிரம் டன் தான்.

காரணம் என்னவெனில் கட்டாயக் கொள்முதல் அடிப்படையில் நிலபிரபுக்களிடமெல்லாம் அவர்களின் தேவைக்கு மிஞ்சியதையெல்லாம் கட்டாயக் கொள் முதல் செய்வது என்ற நடைமுறைத் திட்டம் இல்லாததே. மாருக, காங்கிரஸ் அரசாங்கம் தேவைக்கு மிஞ்சிய பெருவாரியான தானியத்தை பதுக்கி வைத்தல், கள்ளமார்க்கெட்டில் விற்பனை செய்தல், அல்லது கள்ளமார்க்கெட் வியாபாரம் செய்யும் வர்த்தக சூதாடிகளுக்கு விற்பனை செய்தல் போன்ற மக்கள் விரோதக் கொள்கைகளை செய்வதற்கு நிலப்பிரபுக்களை அனுமதித்துக் கொண்டிருக்கிறது.

எனவே, கொள்முதல் திட்டம் கோவிந்தாவாகிக் கொண்டிருக்கிறது.

### மிகக் கஷ்டமாம்

மேலும், மத்திய பிரதேசத்தில் திட்டமிட்டபடி 6 லட்சம் டன் அரிசி கொள்முதல் செய்வதே மிகக் கஷ்டம் என்றும் இந்திய உணவுக் கார்பரேஷன் ஒப்பாரி வைத்துள்ளது.

---

# அரியூர் சர்க்கரை ஆலை தொழிலாளர் போராட்டம் வெற்றி

அரியூர், ஜன 4—

அரியூர் சர்க்கரை ஆலையில் தொழிலாளர்கள் நடத்திய போனஸ் போராட்டம் வெற்றியடைந்தது.

போனஸ் கோரிக்கையின் பேரில் டிசம்பர் 31-ம் தேதியிலிருந்து தொழிலாளர்கள் வேலை நிறுத்தம் செய்தனர். இந்த வேலை நிறுத்தம் ஜனவரி 2-ம் தேதி மாலைவரை நீடித்தது.

தொழிலாளர்கள் 50 சதவிகித போனஸ் கோரினர். நிர்வாகம் $33\frac{1}{2}$ சதவிகிதத் துக்கு மேல் தர முடியாது என்று பிடிவாதம் செய்தது.

தொழிலாளர்கள் ஒன்றுபட்டு நின்று வேலை நிறுத்தம் செய்ததைப் பார்த்த பின் நிர்வாகம் வழிக்கு வந்தது. 43 சதவிகித போனஸ் தர உடன்பாட்டுக்கு வந்தது.

வேலை நிறுத்தத்தை தோழர் டி. பி. கோவிந்தன் தலைமையில் அனைத்துக் கட்சி சங்கங்களும் ஒன்றுபட்டு நின்று நடத்தின.

லேபர் ஆபீசர் முன்னிலையில் ஏற்பட்ட இந்த ஒப்பந்தத்தில் நிர்வாகத்தின் சார்பிலும் தொழிலாளர்களின் சார்பிலும் கையெழுத்திடப் பட்டன. சிஐ டி யூ சார்பில் தோழர்கள் டி. பி. கோவிந்தன், ஆர் ஜானகிராமன் கையெழுத்திட்டனர்.

மற்றும் ஏ. ஐ. டி. யூ. சி., ஐ. என். டி. யூ. சி., தி. மு. க., சங்கங்களின் சார்பிலும் எம்ப்ளாயீஸ் யூனியன் சார்பிலும் பிரதிநிதிகள் கையெழுத்திட்டனர்.

---

## விவ்சாயிகள் சங்ககொடி...

(1-ஆம் பக்கத் தொடர்ச்சி)

உடைத்தெறிய செங்கொடி, களம் புகுந்தது. முதலில் சிறு சிறு கோரிக்கைகள் முன் வைக்கப்பட்டன.

### களம் புகுந்த செங்கொடி

அன்று 100 கலம் நெல் விளயச்செய்தால் 14வாரம் தான் குத்தகைச் சாகுபடியாளருக்குக் கிடைக்கும். இதற்காக அவன் குடும்பமே உழைக்க வேண்டும் அந்த சம்பளம் கூட உடனடியாகக் கிடைக்காது. ஆடி மாதத்தில் தான் கிடைக்கும். இதற்கெதிரான கோஷம் வைக்கப்பட்டது.

விவசாயத் தொழிலாளிக்கு உயர்ந்த கூலி வேண்டுமென்றும். சாட்டை அடி நிறுத்தப்பட வேண்டுமென்றும் கோரிக்கை வைக்கப்பட்டது.

ஆனல் நிலபபிரபுக்கள் கொடிய அடக்குமுறையை கட்டவிழ்த்து விட்டனர். அரசு அவர்களுக்கு ஆக்கமும், ஊக்கமும் அளித்தது. களப்பால் குப்புவிலிருந்து ஆறுமுகம் வரையிலும் பலி கொடுக்கப்பட்டனர். இருந்தும் உறுதியான போராட்டம் நடந்தது.

அதனல் இன்று 60வாரம் கூலிகிடைக்கிறது.பண்ணை அடிமைகளுக்கு அன்று 2 படி நெல் தான் கூலி கிடைத்தது. இன்று ஏழில் ஒருபகுதிகூலியாகக்கிடைக்கிறது.

கடைசியாக வெண்மணியில் தி. மு. க, காங்கிரஸ், சுதந்திரா நிலப்பிரபுக்களால் 44 பேர் தீயிட்டு கொலை செய்யப் பட்டனர், இப்படி ரத்தம் சிந்தி அடக்குமுறையைசந்தித்து உரிமைகளைப் பெற்றெடுத்தவர்களின் கொடியைத்தான் நாம் இன்று இங்கு உயர்த்தியுள்ளோம். நமதுஇயக்கம் இன்று தமிழகமெங்கும் பரவியுள்ளது,

நாம் சகோதரஇயக்கங்களுடன்தோளோடு தோள் நின்று தொடர்ந்து செயலாற்றுவோம் என்று உறுதி கூறி முடிக்கிறேன்.

# திண்டுக்கல் ஒற்றுமையை சீர்குலைக்காதீர்'

## அ. தி. மு. க.-வலது கம்யூ. தலைவர்களுக்கு ஏ. பாலசுப்ரமண்யம் வேண்டுகோள்

மதுரை, ஜன. 4—

**காங்கிரசையும், தி மு க வையும் முறியடிக்க திண்டுக்கல் தேர்தலில் உருவான ஒற்றுமையை நீடிக்கச்செய்வது இன்றைய அத்தியாவசியத்தேவை என்றும், வலது கம்யூனிஸ்டுகளின் நேர்மையற்ற போக்கினால் இந்த ஒற்றுமை குலையும் நிலைமை ஏற்பட்டுள்ளது என்றும், அ தி மு க சரியான நிலைபாட்டினை எடுத்து, இந்த ஒற்றுமையை காக்கவேண்டும் என்றும், மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் தமிழ் மாநிலச் செயலாளர் தோழர் ஏ. பாலசுப்ரமண்யம் வேண்டுகோள் விடுத்தார்.**

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் சார்பில் திலகர் திடலில் நடைபெற்ற பிரம்மாண்டமான பொதுக்கூட்டத்தில் அவர் பேசினார். அந்தப்பேச்சு விவரம் வருமாறு:—

தமிழ்நாட்டில் இன்று உருவாகிவரும் அரசியல் சூழ்நிலையைப்பற்றி கூற விரும்புகிறேன். நாம் எதிர்பார்த்த சூழ்நிலை இன்று உருவாகியிருப்பதை நாம் இப்போது கண்கூடாகப் பார்க்க முடிகிறது. சிண்டிகேட், இண்டிகேட் காங்கிரஸ் இணைப்பைப்பற்றி உங்கள் கவனத்துக்குக்கொண்டு வருகிறேன்.

### காங்கிரஸின் ஏஜெண்டானர்கள்

காங்கிரசில் சிண்டிகேட் என்றும் இண்டிகேட் என்றும் பிளவு ஏற்பட்டதும் முற்போக்கு வேஷம் தரித்துக்கொண்டிருந்த சிலர் குழப்பத்துக்கு ஆளானர்கள். காங்கிரசில் முற்போக்கு பகுதி அப்படியே இந்திரா தலைமையில் வந்துவிட்டது என்றும் பிற்போக்கு பகுதி காமராஜரின் கீழ் வந்து விட்டது என்றும், இந்த இரண்டு பகுதிகளுக்கும் இடையே மோதல் முக்கியத்துவம் வாய்ந்தது என்றும் வர்ணித்தார்கள். அவ்வாறு வர்ணித்துக்கொண்டு இந்திரா காங்கிரசுக்குத்துணை போனர்கள். ஒன்ருயிருந்த காங்கிரசுக்கு துணை போனவர்கள்தான் பிளவுக்குப்பின் காங்கிரசின் அப்பட்டமான ஏஜெண்டாக ஆனர்கள்.

வலது கம்யூனிஸ்ட் கட்சியின் நிலை இது என்ருல், எஸ். எஸ். பி. இந்திரா காங்கிரசை தோற்கடிக்க வேண்டும் என்பதற்காக குருட்டுத்தனமான முறையில் சிண்டிகேட். சுதந்திரா போன்ற பிற்போக்கு கட்சிகளுடன் சேர்ந்தது.

### உறுதியாக நின்ருேம்

நாம் மட்டுமே 1971-ல் சிண்டி—இண்டி இரண்டு அணிகளிலும் சேராத கொள்கையில் உறுதியாக நின்றவர்கள்.

இந்த நிலையை எடுப்பதில் ஏற்படும் சோதனைகளைப் பற்றி நாம் கவலைப்படவில்லை.

இன்று நிலைமை என்ன?

நாம் கூறியபடி இண்டியும்—சிண்டியும் ஒன்று என்பதை அனைவரும் பார்க்கிருர்கள்.

விலை ஏற்றம், வேலையின்மைபெருகிஅதனல் இந்திரா காங். மக்களிடம் தனிமைப்பட்டுள்ளது. இரண்டு காங்கிரசையும் இணைப்பதின்மூலம் நிலைமையைச் சமாளிக்கலாம் என்ற முயற்சி நடைபெறுகிறது.

இந்திராவும் காமராஜரும் சந்தித்த போதே காங்கிரஸ் இணைப்புக்குப்பின்னல் சிதம்பரம் செட்டியார், டி. வி. எஸ். போன்ற முதலாளிகள் இருக்கிருர்கள் என்று நாம் சொன்னேம். இரு காங்கிரஸ்களும் இணைவதற்கு அவர்களிடையே சிறிது சங்கடம் வந்தாலும் இது இணைப்புக்கானஒருபடி என்று நாம் கூறினேம்.

### குட்டை உடைத்தார் சுப்ரமணியம்

ஆனல் அவர்களிடம் பிரச்சாரக் கருவிகள் இருப்பதால் எப்படி வேண்டுமானலும் பொய் பேசலாம் என்ற தைரியத்துடன் பேசுகிருர்கள். இது இணைப்புக்கான முயற்சியல்ல என்றும்கோவை, பாண்டிச்சேரி தேர்தல் உடன்பாட்டுக்கான முயற்சிதான் என்றும் சொன்னர்கள்.

என்ருலும்ஒருவாரத்துக்கு முன் சி. சுப்ரமணியம் குட்டை உடைத்து விட்டார். அவ்வளவு விரைவில் குட்டை உடைத்து விடுவார் என்று நான் எதிர்பார்க்கவில்லை. ஆனல்தமிழ் நாட்டில் இரண்டு காங்கிரஸ் கட்சிகளுக்கும் இடையேயான உடன்பாடு இவற்றை ஒரே கட்சியாக இணைப்பதற்கான முயற்சியில் முதல்படி என்று சி. சுப்ரமணியம் கூறி விட்டார்.

நாலைந்து மாதங்களுக்கு முன்பே இதை நாம் கூறினேம். அதையே இன்று சி. சுப்ரமணியமும் கூறுகிருர்.

காங்கிரசை எதிர்த்து நாம் அன்று தனியாகப் போராடினேம். ஜனநாயக கட்சிகளை அழைத்த போது அவைகள் அன்றுவரவில்லை.

### கலைஞர் அகந்தைக்கு அடி

இடையே திமுக உடைந்தது. அதிமுக உதயமானது அது பற்றி மகிழ்ச்சியடைந்தோம்.

அகந்தையின் உச்சாணியில் உட்கார்ந்திருந்த கலைஞரை எதிர்த்துப் போராடுவதற்கும், அதே சமயம் பெரிய சனியனை எதிர்த்துப் போராடுவதற்கும் ஜனநாயகக் கட்சிகளின் கூட்டணியை அமைக்க முயற்சித்தோம்.

அதிமுக இத்தகைய கூட்டணி அமைக்க ஆதரவளிக்க மறுத்தது.

காங்கிரஸ் மீதுநம்பிக்கை வைத்து ஜனதிபதியிடம் மனுக்கொடுக்கும் போதே இதனல் பலனில்லை என்று அதிமுக தலைவர்களிடம் கூறினேம், இந்த மனு ஜனதிபதியிடமிருந்து இந்திராவுக்கு வரும், கருணநிதிக்கு வரும் வேறென்றும் நடக்காது என்று கூறினேம்.

### கல்யாண சுந்தரம் முயற்சி

திண்டுக்கல்தேர்தல் வந்த போதுகூட ஆளும்காங்கிரசுடன் சேர முயற்சிதார்கள். இதற்காகநண்பர் கல்யாண சுந்தரம்வெகு முயற்சி செய்தார். எம் ஜி ஆரும் காங்கிரசுடன்சேர விரும்பினர்.

அதிமுக, வலது கம்யூனிஸ்ட், இந்திரா காங்கிரஸ் அணியை உருவாக்கக் கோரி திண்டுக்கல்லில் காங்கிரஸ் கட்சி நிறைவேற்றிய தீர்மானத்தை எம்ஜி ஆர் வரவேற்ருர். இதற்கு "முற்போக்கு ஜனநாயக அணி" என்றும் பெயர் கொடுத்தார். காங்கிரஸ் சேர்ந்திருக்கும் அணி முற்போக்கு அணியில்லை என்று நாம் கூறியதை அவர்கள் கேட்கவில்லை. என்ருலும் காங்கிரஸ் தனியாகப் போட்டி போட அந்த அணி உருவாகவில்லை இந்திரா காங்கிரஸ் சார்பில் சீமைச்சாமி போட்டியிட்டு 11 ஆயிரம் ஓட்டுக்களே வாங்கி தமிழ் நாட்டில் அந்தக் கட்சி தலை தூக்க முடியாத நிலை ஏற்பட்டது.

அதற்குப் பின் விலைவாசி எதிர்ப்புப் போராட்டத்திலும் மத்திய அரசையும் மாநில அரசையும் சேர்த்து கொண்டு கல்யாண சுந்தரம் சர்வ கட்சி கூட்டம் நடத்தினர். அந்தக் கூட்டத்தில் நமக்கு வேலையில்லை என்று நாம் போகவில்லை.

உறுதியாக காங்கிரசுடன் உறவு வைத்துக் கொள்ளக் கூடாது என்ற நிலையை அன்று எடுக்க மறுத்தார்கள்.

### மாறிய நிலைமை

இன்று நிலைமை மாறியுள்ளது.

இப்போதுகாங்கிரசையும், தி மு க வையும் எதிர்த்துப் போராட மார்க்சிஸ்ட் அ தி மு க, வலது கம்யூனிஸ்ட் கட்சிகளும் மற்ற ஜனநாயக கட்சிகளும் கொண்ட அணி உருவாக்குவதற்குக் காலம் கடந்து விடவில்லை.

வலது கம்யூனிஸ்ட் கட்சி அதன் நேர்மையற்ற போக்கைக் கைவிட்டால் அவர்களையும் சேர்த்துக் கொள்ள வேண்டும் என்றே நாம் விரும்புகிருேம். அவர்களைப் போன்ற குறுகிய புத்தி நமக்கில்லை. அ தி மு க வும் வலது கம்யூனிஸ்ட் கட்சியின் வீம்புக்கு இடம் கொடுக்காமலிருந்தால் இங்கும் ஒரு வலுவான ஜனநாயக அணியைஉருவாக்க முடியும்.

# இன்றைய நெருக்கடி...

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

இருந்தது. ஆனல் 25 ஆண்டுகளான பிறகு அது 10கோடியே 60லட்சம் டன்னக உயர்ந்துள்ளது. ஆனல் ஜனத்தொகை 10கோடியிலிருந்து 54கோடியாக மட்டும்தான் உயர்ந்துள்ளது. உணவு உற்பத்தி 2 மடங்குக்கு மேல் உயர்ந்துள்ளது. ஜனத்தொகை ஒரு மடங்கு கூட உயரவில்லை. இதுதான் உண்மை நிலை. எனினும் ஏன் விலைவாசி குறையவில்லை?

உற்பத்தியாகும் தானியம் நிலப்பிரபுக்களிடமும் வர்த்தகச் சூதாடிகளிடமும் சிக்கிக் கொள்கின்றன. அவர்களின் கொள்ளை லாபத்துக்காக விலைகளை உயர்த்தி விற்பனை செய்கின்றனர். இதை அரசாங்கம் அனுமதித்துக் கொண்டிருக்கின்றது. சுதந்திரத்திற்குப் பிறகு ஒரு வருடம் கூட விலை இறங்கியதில்லை.

ஆனல் ஆட்சியாளர்கள் கரீபி கட்டோ வறுமையை விரட்டுவோம் என வேகமாக கூப்பாடு போடுகிருர்கள். ஆனல் அவர்களின் கூப்பாட்டைவிட, வேகமாக விலை உயருகிறது.

### ஓரேஒரு பிரதமர்

பொருட்களின் விலை உயருகிறதே என்ருல் பொருட்களின் உபயோகத்தை குறையுங்கள் என்கிருர்கள். சீனிவிலைகுறைய வேண்டுமா? சீனியை உபயோகிக்காதே: அரிசி விலை குறைய வேண்டுமா? அரிசியை உபயோகிக்காதே: துணிவிலை குறையவேண்டுமா? துணியை உபயோகப்படுத்தாதே என்று இப்படி பொறுப்பற்ற முறையில் பதில சொன்ன பிரதம மந்திரி உலகத்திலேயே இந்திராகாந்திதான்.

இப்படிப்பட்ட பொறுப்பற்ற பதில்களை கூறிக் கொண்டே, வரிமேல் வரி போட்டு மக்களை பிழிந்தெடுக்கின்றனர்.

சமீபத்தில்தான் சீனிக்கு $7\frac{1}{2}$ சதவீத வரி போடப்பட்டுள்ளது. மேலும் 5 ஆண்டு திட்டத்திற்காக மக்கள் வாங்கும சரக்குகள் மீது 6 ஆயிரம் கோடிக்கு வரி போடவிருக்கிருர்கள்.

### உண்மை என்ன?

இவைகளையெல்லாம் நாம் எதிர்த்தால் அவர்கள் சொல்வதென்ன?

நம்நாடு வறுமையான 54 கோடி ஜனத்தொகை கொண்ட பெரிய நாடு. எனவே சகித்துக்கொள்ள வேண்டும். கிளர்ச்சிகள் செய்யக்கூடாது வேலை நிறுத்தம் கூடாது, கடுமையாக உழைக்க வேண்டும். விலைவாசி உயர்வு உலகமெல்லாம் உள்ளதுதான் என்கிருர்கள்.

ஆனல் உண்மை அதுவா? இல்லை,

100 கோடி மக்கள் கொண்ட சோசலிஸ்நாடுகளில் விலைவாசி உயர்வில்லை, வேலையில்லாததிண்டாட்டம் இல்லை. இந்தியா போன்ற முதலாளித்துவ நாடுகளில் உள்ள மக்களுக்கு இருக்கும் வேதனைகள் அந்நாட்டு மக்களுக்கு இல்லை.

உதாரணமாக சீனம் நம்மைவிட 2 ஆண்டுகள் கழித்து சுதந்திரம் வாங்கிய நாடு. அந்த நாடு எப்படி முன்னேறியுள்ளது. என்பதற்கு ஒரு உதாரணம் 80 கோடி மக்களைக்கொண்டு நம்மைவிட ஜனத்தொகை மிகுந்தநாடு. 2 நாடுகளும் சுதந்திரம் அடைவதற்கு முன்பு, இந்தியாவில் 40 ஆயிரம் மைல் நீளமுள்ள ரயில்வே இருந்தது. ஆனல் சீனத்தில் 8 ஆயிரம் மைல் நீளமுள்ள ரயில்வேதான் இருந்தது, சீனத்தை விட இந்தியா யந்திரத் தொழில் வளர்ச்சியடைந்த நாடாக இருந்தது.

ஆனல் இன்று நிலைமை என்ன? இன்று அந்நாடு அன்னியர்களுக்கு கடனக ஒரு பைசாகூட கொடுக்க வேண்டியதில்லை. துரதிருஷ்டமாக சீனத்துக்கும் சோவியத்துக்கும் ஏற்பட்ட தகராறினல் சோவியத் நாடு உதவியை நிறுத்தி விட்டது சீனம் சோவியத்துக்கு ஒரு பைசா பாக்கியில்லாமல் கடனை கொடுத்து விட்டது.

85 கோடி மக்களைக் கொண்ட அந்நாட்டில் பிச்சைகாரர்கள் இல்லை.

உடலில் துணியில்லாமல் இருப்பவர்கள் இல்லை. விலைவாசி உயர்வு இல்லை. வேலையில்லாத் திண்டாட்டம் இல்லை. அதனல்பட்டினி இல்லை. பஞ்சமில்லை- காரணம் என்ன என்பதை நாம் சிந்திக்க வேண்டும்.

காரணம் சீனம் போன்ற சோசலிஸ்ட் நாடுகளில்ஒரு வட்டிக்காரன்கூட இருக்க முடியாது நிலப்பிரபுவோ, முதலாளியோ இருக்க முடியாது. சுருக்கமாக மனிதனை மனிதன்சுரண்டுவது இல்லை இதேபோன்ற நிலைதான் வடகொரியா! வடவியட்நாம் போன்ற சோசலிஸ் நாடுகள்.

அந்நாட்டு மக்கள் ஏகாதிபத்திய வாதிகளை ஆயுதம் தாங்கிய யுத்தத்தால்விரட்டியடித்தனர். வடகொரியாவிலும் வடவியட்நாமிலும் 50 சதவீத மக்கள் நிலமற்றவர்கள்தான் இருந்தனர்.

ஆனல் இன்று வட்டிக் கடைக்காரர்கள் இல்லை, நிலப்பிரபுக்கள் இல்லை. நிலமெல்லாம் நிலப்பிரபுக்களிடமிருந்து பறிக்கப்பட்டு நிலமற்றவர்களுக்கு விநியோகம் செய்யப்பட்டது.

ஆனல், இந்தியாவில் நிலமற்றவர்களுக்கு நிலம் கொடுக்கப்படாமலே நிலச் சீர்திருத்தம் பற்றி 20 ஆண்டாக பேசி வருகிருர்கள். இது வேடிக்கையும்விநோதமுமானது.

இதில் தி மு க வுக்கும் காங்கிரசுக்கும் வித்தியாசமில்லை. போராடும் கிராமத் தொழிலாளர்களை வேட்டையாடுவதில் இரு கட்சிக்கும் வேற்றுமை இல்லை.

### வலது கம்யூனிஸ்டுகளின் நிலை

எனவே தமிழ்நாட்டு மக்கள்இவ்விரு கட்சிகளின் கொள்கைகளையும் எதிர்த்து போராட வேண்டும்.

இதற்கு இடதுசாரி கட்சிகள் ஒன்றுபட வேண்டும். உழைக்கும் மக்களை திரட்ட வேண்டும். ஆனல் வலது கம்யூனிஸ்டுகள் காங்கிரசின் ஏஜண்டாகச் செயல்படுகிருர்கள்

ஒரு காலத்தில் காமராஜரை முற்போக்குவாதி என்று பாராட்டிக் கொண்டே அரசியல் நடத்தினர்கள். இன்று இந்திராவுக்கு ஏஜண்டாகச் செயல்படுகிருர்கள். தொழிலாளர்களை திரட்டுவதற்குப் பதிலாக காங்கிரசுக்கு வால் பிடித்துக் கொண்டிருக்கிறது இந்தக் கட்சி.

கேரளத்தில் காங்கிரசோடு கூட்டணி அரசு வைத்துக் கொண்டு மக்களை ஒடுக்குவது இந்தக் கட்சிதான்.

மேற்கு வங்கத்தில் இடதுசாரிக் கூட்டணி அரசை உடைக்க இந்திரா காங்கிரசுக்கு உதவிசெய்தது இந்த வலது கம்யூனிஸ்டதான்.

அங்கு காங்கிரஸ் கட்சியின் அடக்கு முறைக்கு ஒத்தூதுவதும் இந்த வலது கம்யூனிஸ்ட் தான்.

மக்களின் போராட்டம் வளரும்போதெல்லாம் இந்திராவுக்கு ஆதரவு என்ற கம்பிமேல் நடப்பது இந்த வலது கம்யூனிஸ்ட் தான்.

### வலது கம்யூனிஸ்டின் பச்சோந்தித் தனம்

வலது கம்யூனிஸ்ட் கட்சி காங்கிரசோடு உ. பி. லும் ஒரிசாவிலும் கூட்டு ஏற்படுத்திக் கொள்ள ஏங்கிக் கொண்டிருக்கிறது.

ஆனல், பம்பாயில் காங்கிரசை எதிர்த்து டாங்கேயின் மகள் போட்டியிடுகிருர். மகாராஷ்டிராவில் மட்டும் விலைவாசி கூடி விட்டது உணவு தட்டுப்பாடு ஏற்பட்டுள்ளது என்று டாங்கே பேசுகிருர்.

வலது கம்யூனிஸ்டுகள் தங்கள் சந்தர்ப்பவாத நிலையை மறு பரிசீலனை செய்ய வேண்டும்.

தமிழ் நாட்டில் அடுத்து நடைபெறவிருக்கும் தேர்தல் பற்றி நான் எதுவும் குறிப்பிட விரும்பவில்லை.

எது எப்படியிருந்தாலும் தமிழ் நாட்டு மக்கள் காங்கிரஸ், தி மு க கொள்கைகளை எதிர்த்துப் போராட ஒன்றுபட வேண்டும்.

### நெருக்கடி தீர வழியென்ன?

நாங்கள் விரும்புவதெல்லாம் ஒற்றுமையும் அதன அடிப்படையிலான போராட்டமுமே. அதன் மூலமே மக்கள் இன்றைய நெருக்கடியிலிருந்து தப்பிக்க முடியும்.

இன்றைய நெருக்கடிக்கு முடிவு காணவேண்டுமானல் இன்றைய காங்கிரஸ் அரசாங்கம் தூக்கியெறியப்பட வேண்டும்.

இன்றைய காங்கிரசு அரசாங்கம் தூக்கியெறியப்படுவதுதான் நம் துயரங்கள் தீர ஒரே வழி. ஆனல் அவ்வேலை அப்படியொன்றும் எளிதல்ல. அவ்வரசாங்கம தன் கையில் ராணுவம், போலிசைக் கொண்டிருக்கிறது. அதற்காக நாம் நமது குறிக்கோளை விட்டுவிட முடியாது.

ஒரு பக்கம் காங்கிரசு வெறும் வாய்வீச்சுகளையும், ஏமாற்றுவேலைகளையும் ஆயுதமாகவும் மறுபக்கம் அதிகாரம், அடக்குமுறை இவைகளை ஆயுதமாகவும் கொண்டுள்ளது.

அடக்கு முறைத் தன்மை கொண்ட காங்கிரசு அரசாங்கம் தூக்கியெறியப்பட வேண்டியது என்பது இறுதிக் குறிக்கோளானலும்— அதற்காக நாம நீண்ட காலம் போராட வேண்டியிருக்கும் என்ருலும்—

இன்று காங்கிரசின் தவருன கொள்கைகளின் விளைவுகளிலிருந்தும் அடக்கு முறைகளிலிருந்தும் நாம தப்பிக்க காங்கிரஸ் ஆட்சியை எதிர்த்து நாம் இன்றைக்கு கோரிக்கைகளை முன்வைத்து பெரும் போராட்டங்கள நடத்தியாகவேண்டும்.

அடைத்துக் கிடந்த வீட்டில் தீ வைத்து 44 பேரை துடிக்கத் துடிக்க சாகடித்த கீழ்வெண்மணிக்கொடுமை இந்த தமிழ் நாட்டில் இந்த தி.மு.க. ஆட்சியில்தான் நடந்தது. இந்ததி.மு.க., காங்கிரசுக் கொள்கைகளுக்கு மாற்றுத் திட்டம் தரமுடியாது. எனவே இவ்விரு கட்சி அரசாங்கங்களையும் எதிர்த்துப் போராடுவதில் தமிழ்நாட்டு மக்கள் முன் வரவேண்டும்.

இந்தப்பக்கமா, அந்தப்பக்கமா என்ற குழப்பநிலை இல்லாமல் தன்சொந்த வழியில் தமிழ்நாட்டு மக்கள் முன் வரவேண்டுமென கேட்டுக் கொள்கிறேன்.

### கிராமமும், நகரமும்

இந்தியா 70 சதவிகிதம் கிராமப்புற மக்களைக் கொண்ட நாடு. கிராமப்புற மக்களின் போராட்டமும், அனுபவமும் இல்லாமல் நகர்புறம் மட்டும் போராட்டங்களை நடத்தி, வெற்றி பெற்றுவிட முடியாது. எனவே நகர்புற தொழிலாளர்களும, மத்தியதரவர்க்கத்தினரும், படித்தவர்களும், மாணவர்களும, கிராமப்புற மக்களோடு இணைந்து போராட வேண்டும்.

# விவசாயிகள் சங்க மாநாடு

## வி. ஏ. கருப்புசாமி வரவேற்புரை

பழனி, ஜன 4—

தமிழ் நாடு விவசாயிகள் சங்கத்தின் 17-வது மாநாட்டுக்கு தமிழக மெங்குமிருந்தும்வந்திருந்த பிரதிநிதிகளை வரவேற்புக் குழு சார்பில் தோழர் வி. ஏ. கருப்புசாமி வரவேற்ருர். அப்போது அவர் குறிப்பிட்டதாவது :—

தமிழ் நாடு விவசாயிகள் சங்கத்தின் 17 வது மாநாட்டிற்கு வருகை தந்திருக்கும் உங்கள் அனைவரையும் வரவேற்புக் குழுவின் சார்பாக மிக்க மகிச்சியுடன் வரவேற்கிறேன்.

### இயக்கத்தின் இதயம்

தஞ்சை மாவட்ட இயக்கம்தான்—தமிழ் நாடு விவசாயிகள் சங்கத்தின் இருதயம். அதன் சீரும் சிறப்பும், தியாகப் பாரம்பரியமும் நமது இயக்கத்தின் சொத்தாகத் திகழ்கிறது. அதன் படி [illegible] மற்றைய மாவட்டங்களுக்கும் இயக்கத்தை விஸ்த்ரிக்க நாம் அனைவரும் முயற்சி செய்ய வேண்டிய நிலையில் இருக்கிருேம்.

அகில இந்திய விவசாய சங்கத்தின் அறை கூவல் தஞ்சை இயக்கத்தின் அனுபவம் ஆகியவற்றின் அடிப்படையில் மதுரை--முகவை மாவட்டத்தில் நமது அடித்தளமான விவசாயத தொழிலாளிகளையும், ஏழை விவசாயிகளையும் ஒன்று திரட்டும் முயற்சியில் ஈடுபட்டுள்ளோம்.

கம்பம் பகுதியில் கூலி உயர்வுக்கான இயக்கத்தில் சில வெற்றிகளைப் பெற்றிருக்கிருேம். மதுரைத் தாலுகாவிலும் பழநித் தாலுகாவிலும் விவசாயத் தொழிலாளர்களை இயக்கத்திலும் ஓரளவு கொண்டு வந்துள்ளோம். இந்த வேலைகளில் முன்னேற்றம் காண இன்னும் எவ்வளவோ செய்ய வேண்டியுள்ளது. இந்தச் சந்தர்ப்பத்தில் இம்மாநாடு இப்பகுதியில் நடைபெறுவது இயக்கத்தை விஸ்தரிக்கப் பேருதவி செய்யும்.

### புதிய நோக்கு புதிய பாதை

விவசாயத் தொழிலாளிகளும், ஏழை விவசாயிகளும், நடுத்தர விவசாயிகளும் கொடூரமான சுரண்டலால் மிக மோசமாகப் பாதிக்கப் பட்டுள்ளார்கள். இப்பகுதி மக்களை ஒன்று திரட்ட நாம் முன் கை எடுக்கா விட்டால் வறுமையும் அதனல் ஏற்படும் சீரழிவையும் உபயோகப்படுத்தி ஜாதி, சமய, பிராந்திய வெறிகளில் நமது வர்க்கத்தையே ஆளும்வர்க்கங்கள் திசை திருப்பி விட்டுவிடும். இன்னெரு பக்கம் திருத்தல் வாதிகளும் சீர்திருத்த வாதிகளும் வர்க்கப்போராட்டத்தின் போர்ப் பாதையைத் திசை திருப்பி விடுவார்கள்.

ஆகவே, நமது பழைய பாதையிலிருந்தும், பார்வையிலிருந்தும் மீண்டும்பாதிக்கப்பட்ட மக்களை ஒன்று திரட்டவும், விவசாயப் புரட்சியின் பேரத்துடன் அழைத்துச் செல்லவும் இம் மாநாடு திட்டமிட வேண்டும். இயக்கத்தை வீறு கொண்டு முன்னேக்கிச் செல்ல முடிகள் செய்ய வேண்டும்.

இம்மாநாட்டைநடத்தளங்களால் முடிந்த முயற்சிகளைச் செய்துள்ளோம், பழனித் தாலுகாவில் நமக்குச் செல்வாக்குள்ளசுமார் 20 கிராமங்களில் சுமார்

(4-ம் பத்தி பார்க்க)

(8-ம் பத்தி தொடர்ச்சி)

10.000ரூபாய்வரைவசூலிக்க முடிவு செய்தோம். விவசாயத் தொழிலாளிகள்தங்கள் ஒரு நாள் கூலியையும் நடுத்தரவிவசாயிகள்அரிசி, காய்கறி, விறகு போன்ற பொருள்களையும் கொடுத்து இந்த வசூலைப் பூர்த்தி செய்து கொண்டிருக்கிருர்கள் 6—1—74.ந் தேதி பேரணிக்கும் சிறப்பான ஏற்பாடுகள் செய்து வருகிருேம். மாநாடு நடைபெறும் இடம், உணவு. இதர ஏற்பாடுகளில் குறைகள் இருப்பின் தவிர்க்க முயற்சி செய்கிருேம்.

புதிய நோக்குடன் விவசாயிகள் இயக்கத்தைமுன் கொண்டு செல்ல வந்திருக்கும் பிரதிநிதித் தோழர்களுக்கும், அதற்கு ஆக்கமும, ஆதரவும் அளிக்க வந்துள்ள சகோதரப் பிரதிநிதித் தோழர்களுக்கும் புரட்சி வணக்கத்தைக்கூறி வருக! வருக! என வரவேற்கிறேன்.

தியாகிகள் நாமம் வாழ்க!

தமிழ்நாடு விவசாய சங்கத்தின் 17.வதுமாநாடு வெல்க!

# சிலி ராணுவஆட்சியின் வெறிக்கு பல தேசபக்தர்கள் பலி

## ஆளில்லாத் தீவில் வைத்து பட்டினி போடும் கொடுமை

ஹவானா, ஜன. 3—

சிலி நாட்டில்ஆட்சியைக் கைப்பற்றியிருக்கும் ராணுவக் கும்பல், அந்த நாட்டின் ஜனநாயகவாதிகளுக்கும், தேசபக்தர்களுக்கும் எதிராகப் புரிந்துவரும் அட்டூழியங்கள் பற்றி தகவல்கள் வந்துள்ளன.

சிலி கம்யூனிஸ்ட் கட்சி பொதுச்செயலாளர் லூயி கார்வாலனை ராணுவக் கோர்ட்டில் விசாரித்து சுட்டுக் கொல்லும் முயற்சிக்கு உலகெங்குமிருந்து கண்டனக் குரல் எழுந்தது. இந்த நிலைமையில் கார்வாலனை சுட்டுக் கொல்லுவதற்குப் பதில் கொடுமைப் படுத்தி கொல்லும் முயற்சியில் பாசிஸ்ட் ராணுவ ஆட்சி இறங்கியுள்ளது.

கார்வாலன் சிறையில் [illegible]

சிலி மக்களுக்கு சேவை செய்வதில் அவர் காட்டியுள்ள உறுதியும,போராட்ட உணர்வும உலகம் முழுவதும் கவர்ந்துள்ளது.

சிலியில் ஆட்சியைப் பிடித்திருக்கும ராணுவக்கும்பல் இரணடு மாதங்களுக்கு மேல் கார்வாலனை சொல்லொணு கொடுமைக்குள்ளாக்கியது.

இப்போது அவர் டாசன் என்ற தீவில் வைக்கப்பட்டுள்ளார். அண்டார்டிக்கடலிலுள்ளஇந்தத் தீவில் மனிதர்களோ ஜீவராசிகளோ கிடையாது. ஒரே பாறையாக இது காட்சியளிக்கிறது.

சிலி நாட்டில் ராணுவ ஆட்சியை எதிர்க்கும் ஜனநாயக வாதிகள் இந்தத் தீவில்தான் கொண்டுபோய் விடப்பட்டுள்ளனர்.

இங்கு வாழ்வதற்கு எந்த வசதியும் கிடையாது. ராணுவ ஆட்சியை எதிர்ப்பவர்கள் இங்கு சரியான ஆகாரம் இல்லாமலும் அரைப் பட்டினி கிடந்தும் அணு அணுவாகச் செத்துக் கொண்டிருக்கிருர்கள்.

இந்தத் தீவில் கடுமையான குளிர் அடிக்கிறது. என்ருலும் இந்தத் தீவில் கொண்டு வந்து விடப்பட்டிருப்பவர்களுக்கு குளிரைத் தடுத்துக் கொள்ளுவதற்குத் துணி கிடையாது.

குளிர் தாங்க முடியாமல் அங்கிருப்பவர்கள் கஷ்டப் பட்டுக்கொண்டிருக்கிருர்கள். இவர்களைச் சுட்டுக் கொன்ருல் உள் நாட்டில் எதிர்ப்பு வரும் என்று அஞ்சும் ராணுவ ஆட்சி இந்தத் தீவில் வைத்து சித்திரவதை செய்கிறது.

இந்தத் தீவில் வைக்கப் பட்டிருப்பவர்களில் சிலி அலெண்டி அரசில்அமைச்சர்களாக இருந்த அல்மெடா, ஜோஸ், ஜெய்ம் தோகா ஆகியோர் உள்ளனர். மற்றும், ஜோஸ், கடிமார் மார்டோரி அனிபால் பால்மோ போன்ற தலைவர்களும் உள்ளனர். மற்றும் பல அதிகாரிகளும், பேராசிரியர்களும் உள்ளனர்.

இந்தத் தீவில் இறந்தவர்களின் பெயர்களும வெளிவந்துள்ளன. கம்யூனிஸ்ட் கட்சியைச் சேர்ந்த துணை அமைச்சராக இருந்தவரும் அலெண்டியுடன் தோளோடு தோளாக நின்று சண்டையிட்டு காயமடைந்தவருமானடேனியல் வெர்கரா இந்தத் தீவுக்குக் கொண்டுவரப்பட்டபின் இறந்து விட்டார்.

செப். 11-ம் தேதி வரை வால்பரைசோ நகரின் மேயராக இருந்த செர்கியோ வால்கோவிக்கும் இறந்து விட்டார். இன்னும் பலர் செத்துக் கொண்டிருக்கின்றனர்.

# சி. ஐ. டி. யூ. தொழிற் சங்கங்களுக்கு ஓர் அவசர அறிவிப்பு

அன்புள்ள தோழர்களே!

தமிழ்நாட்டில்,தொழிலாளர் சட்டங்கள் அமுல் நடத்தப்பட்டதைப் பற்றிய பரிசீலனைக் கமிட்டியில், சி. ஐ. டி. யூ.வின் சார்பில் தமிழ்மாநிலக்குழுவின் செயலாளர்களில் ஒருவரான தோழர் ஜே. ஹேமச்சந்திரன், இடம்பெற்றிருப்பதை அறிவீர்கள்.

சங்கங்கள்,உடனடியாககீழ்க்கண்ட சட்டங்கள் செயல்படுத்தப்படும்விதம், குறைபாடுகள், மற்றும் அமுலாக்குவதில் உள்ள சிரமங்கள், ஆகியவற்றை தங்களுடைய ஆலோசனைகளுடன், சி. ஐ. டி. யூ. தமிழ்மாநிலக் குழு முகவரிக்கு 15—1—74க்குள் அனுப்பிவைக்க கேட்டுக்கொள்கிறேன்.

(1) தொழிற்சாலை சட்டம்
(2) குறைந்தபட்ச ஊதிய சட்டம்
(3) கடைச் சிப்பந்திகள் ஸ்தாபன சட்டம்
(4) ஹோட்டல், உணவு விடுதிகள் சட்டம்
(5) தேசிய,பண்டிகை விடுமுறை நாட்கள் சட்டம்

தோழமையுள்ள.

ஏ. நல்லசிவன்,
செயலாளர்.
சி ஐ டி யூ, தமிழ் மாநிலக் குழு
19, பூக்காரத்தெரு
மதுரை-1.

மதுரை
5—1—74

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி(மார்க்சிஸ்ட்)தமிழ மாநிலக் குழு சார்பில் தீக்கதிர் அச்சகத்தில் (6/16 பைபாஸ் ரோடு மதுரை- 625018) அச்சிட்டு வெளியிடுபவர் ஆசிரியர் கே. முத்தையா.